


# தரத்தை மதிப்பீராயின், தரும் விலைக்குத் தக்க மதிப்பைத் தருவது ரெக்ஸ்!

எங்கள் ஸ்க்வாஷ்கள், நேர்த்தியிலும் நேர்த்தியானவையாகப் பார்த்துப் பார்த்துப் பறித்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்டவை. பிறகு, தெள்ளிய தூய சீனிப் பாகும் வேறு பல விசேஷச் சரக்குகளும் சேர்க்கப்பட்டவை. எனவே, கலைத்தறியாப் புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது ரெக்ஸ்.




கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1.

*Bergoni 1966A-TM*



பட விளக்கம் 4-ம் பக்கம் பார்க்கவும்

## கல்கி
### பொருளடக்கம்

கீலக சித்திரை 30 — மே 12


நமது பொருளாதாரம்
மேல் நோக்கியிருக்கிறது
என்கிறார் மொரார்ஜி!
Vinu


சர்க்கார்
நிறுவனங்கள்
சர்க்கார் துறை
இப்பொழுதுதான் நாங்கள்
வேலை கற்றுக் கொள்கிறோம்
என்பதை எங்களைக் குறை
கூறுபவர்கள் தெரிந்து
கொள்ள வேண்டும்.
நிர்வாக
அதிகாரிகள்
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்மிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ☐ இதழ் 41

# நட்புறவை நாடுவோம்

ஒவ்வொரு தேசத்துக்கும் அண்டை நாடுகள் இருந்தே தீரும். மலைகளும் நதிகளும் பரந்த கடலும்கூட இந் நாட்களில் ஒரு நாட்டைத் தனித்த தாக்கிக் காப்பாற்ற முடியாது. பழைய காலத்தில் இத்தகைய பிரிவுகள் இருந்தபோது அதுவே தேசங்களுக்குக் காப்பாக இருந்தது போல் இன்றில்லை. அண்டை நாடுகள் ஒற்றுமையுடனிருக்க வேண்டியது இன்று மிகவும் அவசியம். அண்டை நாடுகள் ஒன்றோடொன்று நட்புக் கொண்டிராவிடில், நாளாவட்டத்தில் நட்பின்மை என்பது பகையாகி விடும். ஒரு நாட்டில் சக்தியும் சுபிட்சமும் வாய்ந்திருப்பதே அதற்கு அண்டை நாடுகளின் நட்பைத் தேடித் தரும். இவ்விஷயத்தில் நம் நாடு நல்ல போக்கில் செல்வதாக முன்பு சில காலம் தோன்றியது. ஆனால் வர வர நிலை மாறி, இன்று நாம் துரதிருஷ்ட வசமான ஸ்திதிக்கு இறங்கிவிட்டோம்.

பேரம் பேசுவதன் மூலமே பிற நாடுகளின் தோழமையைப் பெற இயலாது. நட்பு என்பதன் காரியக் கிரமம் இதயத்துடன் நெருக்கமாக இணைந்ததொரு விஷயம். சில அரசியல் கட்சிகள் பாகிஸ்தானைப் பற்றிச் சந்தேகத்தைக் கிளப்பி விடுவதாலும் இந்த ஐயப்பாட்டை நிலைநாட்டுவதாலும் மக்களில் ஒரு பிரிவினரின் ஆதரவை வெகு எளிதில் பெறுகின்றன. இந்தச் சந்தேகமானது துவேஷத்தின் எல்லைக்கே சென்று விடுகிறது. இது நல்லதல்ல. இம்மாதிரி மக்களின் ஆதரவைப் பெறுவதில் சுதந்திரக் கட்சி நம்பிக்கை வைக்கவில்லை. சந்தேகத்தைத் தூண்டி விடுவதைவிட நமது அண்டை நாட்டிடம் நட்புறவையும் நம்பிக்கையையும் வளர்ப்பது கடினமான காரியம். இந்தக் கஷ்டமான பணியையே சுதந்திரக் கட்சி ஏற்றுக் கொண்டிருக்கிறது.

அண்டை நாடுகள் சிறியவையாயினும் சரி, பெரியவையாயினும் சரி, அவற்றை விட நாம் மேலோங்கி நிற்பதாகச் சக்தியைக் காட்டிக் கொள்வது பயன் தராது; நட்பையும் நம்பிக்கையையும் வளர்த்துக் கொள்ளும் மனப்பான்மையே பயன் தரும்.

தேசத்தின் எல்லைப்புறங்களில் இருப்பவர்கள் சட்டப்படி நம் 'சொத்து' என்ற ரீதியில் அவர்களை நடத்தலாகாது. நமது ஆதிக்கத்தை அவர்கள் பூரணமாக ஏற்காமல் போனால் அவர்கள் நம்மை விரோதிப்பதாக எண்ணக் கூடாது. முன்னாட்களில் நதிகளும் மலைகளும் நாடுகளுக்கு எல்லை வகுத்தன. இன்று இப்படிப் பூகோளப் பிரிவினையின் அடிப்படையில் பாராமல், மக்கட் தொகுதி என்ற அடிப்படையில் பார்த்து, தமக்கென ஒரு கருத்துக் கொண்ட மக்களை சகப் பிரஜைகளாகவோ, நட்புள்ள அண்டை நாட்டினராகவோ செய்து கொள்ள வேண்டும். இது முற்றிலும் நாம் விதிக்கும் நிபந்தனைகளின்படியே நடக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது இயலாத காரியம். இவ்விஷயத்தில் எல்லோருக்கும் பொதுவாக ஒரே கிரமத்தைப் பின்பற்றுவதும் பயன் தராது. நல்லெண்ணம் என்கிற நெகிழ்ந்து கொடுக்கும் அம்சத்தால்தான் இதைச் சாதிக்க முடியும். வறட்டுக் கோட்பாடு, அல்லது டம்பத்தைக் காட்டி நெகிழ்ச்சியைப் பாழ்படுத்தக் கூடாது.

நான் சொல்வதன் நியாயத்தை ஒரு சில அரசியல் தலைவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள் என்றாலும் ஏராளமான மக்களின் ஆதரவு வேண்டும் என்ற ஆசை காரணமாக, அவர்கள் இதற்கு நேர்மாறான போக்கை மேற்கொள்கிறார்கள். பொருளாதார விஷயத்தில் ஏதோ ஒரு மோஸ்தரில் 'சோஷலிஸ்டு'களாகத் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதால் பல கட்சிகளும் ஒன்று கூடியிருப்பது போன்றதே இதுவும். இயற்கை விதியை எதிர்த்துச் செய்யும் போர் தோல்வி காண வேண்டியதுதான். காங்கிரஸ் தோல்வி கண்டு வரும் இயற்கை விதிக்கு மாறான போராட்டத்திலேயே மற்றக் கட்சிகளும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளன. சத்தியத்தையே சார்ந்

திருப்பது சுதந்திரக் கட்சிதான். வர்க்கரீதியில் அமைந்த 'சுதேசியம்' என்பதை அடிப்படையாகக் கொண்டு பொய்களையும்வெறுப்புக்களையும் விற்றுமற்றக் கட்சிகள் வெகுஜன ஆதரவு பெற முயலுகையில், இந்த 'யுக்த தந்திர'த்தைப் பொருட்படுத்தாமல் உண்மையைப் பின்பற்றிப் போராடுவது சுதந்திரக் கட்சி.

சத்தியத்தைச் சார்ந்திருப்பதையும், அதற்குத் தேவைப்படும் திடத்தையும் பொறுமையையும் நாம் கைவிடாது இருப்போம். தனது இலட்சியத்திலிருந்து பிறழாமல் 'சத்தியமேவ ஜயதே' என்ற கொடியை உயரத் தூக்கியபடி சுதந்திரக் கட்சி பணி புரியுமாக!

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# என்ன சேதி?

## கணித மேதைக்கு ஒரு விழா

சென்னை, முத்தியாலுப்பேட்டை உயர் நிலைப் பள்ளியின் பழைய மாணவர்கள் "எண்களின் நண்பர் சங்கம்" என்று ஒரு சங்கம் நிறுவியிருக்கிறார்கள். எண்களின் ஆருயிர்த் தோழராக வாழ்ந்து மறைந்த கணித மேதை ராமாநுஜத்தின் வாழ்விலும் ஆராய்ச்சியிலும் அளவுகடந்த ஈடுபாடு கொண்டவர்கள் என்பது சங்கத்தின் பெயரிலிருந்தே ஊகிக்கலாம். இச்சங்கத்தார் ராமாநுஜன் அவர்கள் தமது வாழ்நாளில் எழுதிய கடிதங்கள், அவரை அறிந்தவர்கள் எழுதிய நினைவுக் குறிப்புக்கள் ஆகியவற்றைத் தொகுத்து ஒரு புத்தகமாகத் தயாரித்திருக்கிறார்கள். அதனை இம்மாதம் 11ம் தேதி மாலை 6 மணிக்குச் சென்னை கோகலே மண்டபத்தில் ராஜாஜி அவர்களைக் கொண்டு வெளியிட ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அன்று இளைஞர்களுக்குக் கணிதத்தில் ஊக்கம் ஏற்படும் வகையில் மற்றொரு நூலை திரு தி. ஜ. ர. அவர்கள் மூலம் வெளியிடுகிறார்கள். ராமாநுஜன் நினைவுக் கழகத் தலைவர் டாக்டர் கே. வெங்கடாசலய்யங்கார் தலைமை வகிக்கிறார்.

கணிதத்தில் ஓர் இமாசலமாக விளங்கிய ராமாநுஜன் அவர்களை நினைவுகூரும் வகையில் இப்படி ஒரு விழா ஏற்பாடு செய்துள்ள நிர்வாகிகள் அனைவருக்கும் பாராட்டுக்கள் உரியதாகும்!

## ஊழல் தரும் பாடம்

காங்கிரஸ் அரசாங்கம் ஏழைகளுக்கு உதவுவதாகப் பிரமாதமாகப் பேசுகிறது. ஆனால் உண்மையில் ஏழைகளை வஞ்சிக்கத்தான் செய்கிறது என்பது கையும் மெய்யுமாக நிரூபிக்கப்பட்டு விட்டது.

உத்தரப் பிரதேசத்தில் காங்கிரஸ் ஆட்சி காலத்தில் நிலமற்ற விவசாயிகளுக்கு நிலங்கள் விநியோகிக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. அதைப் பற்றி விசாரிக்க சம்யுக்த விதாயக் தல் மந்திரி சபை உத்தரவு பிறப்பித்திருந்தது. அந்த விசாரணையின் மூலம் 1,25,000 ஏக்கர் நிலங்கள் உத்தரப் பிரதேசத்தின் 44 ஜில்லாக்களிலுள்ள பெரிய நிலச்சுவான்தாரர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளன என்பது அம்பலமாகி யிருக்கிறது. பலருக்குச் சட்டவிரோதமாக அளிக்கப்பட்டுள்ளது.

இது,காங்கிரஸின் இருபது வருட ஆட்சியில் கடைசி மூன்று ஆண்டு காலத்தில் 44 ஜில்லாக்களில் நடைபெற்றுள்ள ஊழல். மிச்சமுள்ள ஜில்லாக்களையும் மிச்சமுள்ள கடந்த பதினேழு ஆண்டு சரித்திரத்தையும் பார்த்தால் காங்கிரஸின் ஊழல் மலையினும் பெரிதாக வெளிப்படும்.

இதிலிருந்து இன்னொர் எச்சரிக்கையும் பெறவேண்டும். காங்கிரஸ் தோற்று, எஸ். வி. டி. மந்திரி சபை வந்ததால் காங்கிரஸ் நிர்வாக ஊழலை விசாரிக்க உத்தரவு பிறப்பித்தது. அதே போல் இன்று பதவியிலுள்ள காங்கிரஸ் அல்லாத கட்சிகள் அடுத்த தேர்தலில் பதவி இழந்தால், அப்போது பதவிக்கு வரும் கட்சி நிச்சயமாகத் தனக்கு முந்தி ஆட்சி நடத்திய கட்சியைப் பற்றி விசாரணை நடத்தும். அப்போது ஊழல் வெளிப்படாத வகையில் இன்றே யோக்கியமாகவும் நேர்மையாகவும் இன்று ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் நடந்து கொள்ள வேண்டும்.

## வெளியான வினாத் தாள்கள்

இந்த ஆண்டு !பி. யூ. சி. பரீட்சையின் வினாத்தாள்கள் எல்லாம் முன்னதாகவே வெளியாகிப் பரீட்சை என்பது வெறும் கேலிக் கூத்தாகி யிருக்கிறது.

யோக்கியமாகச் சிரமப்பட்டுப் படித்த மாணவர்கள் தங்கள் திறமையைக் காட்ட முடியாமல் போயிருக்கிறது. நீரில் பால் கலந்த நிலைமைதான். இந்த பி. யூ. சி. மார்க்கை வைத்துத்தான் அடுத்த ஆண்டு வைத்திய, பொறி இயல் கல்லூரிகளுக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். மூன்றாந்தர மாணவர்கள் சேர்க்கப்பட்டு முதல்தர மாணவர்கள் சேர்க்கப்படாமல் போக ஏதுவுண்டு. இதனால் தேசத்துக்கு விளையக் கூடியது மகத்தான நஷ்டமாகும்.

'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பார்கள். தஞ்சைக் கோயிலின் அழகைப் பார்த்த பிறகுதான் அந்த எண்ணம் உதித்ததோ என்னவோ? பொருளடக்கப் பக்கத்தில் தஞ்சைக் கோயிலின் நந்தியையும், கோயிலையும் கண்ணுக்கினிய கோணத்தில் படம் எடுத்தவர் :

**கே. எஸ். வி. ராஜன்**

ஒரு வெளி நாட்டு மாணவன் பரீட்சை மண்டபத்தில் தான் வெளியில் பார்த்த அதே கேள்விகளே வழங்கப்பட்டிருப்பதைக் கண்டு மனம் பொருமி, விடை எழுதி என்ன பயன் என்று எழுதித் தாளை அப்படியே திருப்பித் தந்திருக்கிறான். இப்படி மனச்சாட்சியுள்ள மாணவர்கள் வேதனைப்பட்டிருப்பார்கள்.

இதைப் பற்றி சென்னை சர்வகலாசாலையின் உப அத்யட்சகர் டாக்டர் ஏ. லட்சுமண சுவாமி முதலியார் அவர்கள் ஸிண்டிகேட் கூட்டம் நடத்தி ஆராய்ந்த பின் பத்திரிகை நிருபர்கள் ''ஏதாகிலும் செய்தியுண்டா?'' என்று கேட்டதற்கு ''நிருபர்களுக்குச் சொல்லக்கூடியதாக ஒன்றுமில்லை'' என்றார். அந்த வாசகத்துக்குள் அவர் அடைந்துள்ள அவமானம் முழுதும் பொதிந்து கிடக்கிறது.

இருபத்தைந்து ஆண்டுகள் சிறப்பாகச் சென்னை சர்வ கலாசாலையை நிர்வகித்து விட்டுப் பதவியை விடும் தறுவாயில் இப்படியொன்று நிகழ்ந்தால் அவருக்கு எவ்வளவு மனவேதனையாக இருக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

இப்படி எல்லாப் பக்கமும் துயரமும் அவமானமும் விளைவித்துவிடக் கூடிய வகையில் பரீட்சைத் தாள்களை வெளியிட்டவர்கள் அடைந்த லாபம்தான் என்ன?

## சென்னையில் கொள்ளை

சென்னையில் அடுத்தடுத்து இரண்டு துணிகரக் கொள்ளைகள் நடந்திருப்பதைப் படித்து விட்டுச் சென்னை மக்கள் துணுக்குற்றிருக்கிறார்கள். காவல் துறையினருக்கு அடுத்தடுத்துச் சோதனைகள் ஏற்பட்டவாறு இருக்கின்றன. காவல் துறையினர் விரைவில் பொதுமக்களின் நன்மதிப்பைப் பெறுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்!

## லண்டன் நிதிக்கு இந்தியக் கிளை

ஏப்ரல் 7-ந் தேதி 'கல்கி'யில் 'ராஜாஜியின் கருத்துக்கள்' என்ற பகுதியில் லண்டன் திலகர் நினைவுநிதிக்கு உதவி புரிய வேண்டிய தன் அவசியம் எடுத்துக் கூறப்பட்டிருந்தது. அதில் குறிப்பிட்டிருந்த லண்டன் முகவரிக்குச் சர்க்காரின் அநுமதி இன்றித் தொகை அனுப்புவது குற்றமாதலால், பலர் இது பற்றி விசாரித்து எழுதியுள்ளனர். இந்தச் சிரமத்தை நீக்குவதற்காகத் திலகர் நினைவு நிதியினர் பம்பாயிலுள்ள தேனு பாங்கில் கணக்கு வைத்திருப்பதாகவும், இந்தியாவில் உள்ளவர்கள் Treasurer, Lokamanya Tilak Memorial Trust, London, Podar Chambers, Parsee Bazaar Street, Fort, Bombay - 1. என்ற முகவரிக்குப் பணம் அனுப்பி வைக்கலாம் என்றும் இந்த நிதியின் செயலாளர் ஸ்ரீ டி. வி. தஹ்மாங்கர் தெரிவிக்கிறார்.

## சத்தியாக்கிரக உதயம்

சென்னையில் சமீபத்தில் ஓர் இனிய வைபவம் நடைபெற்றது. 1919ல் காந்திஜி, ராஜாஜியின் விருந்ினராக எட்வர்டு எலியட்ஸ் சாலையில் உள்ள திலக் பவனத்தில் தங்கியிருந்தார். அப்போதுதான் காந்திஜி ரௌலட் சட்டத்தை எதிர்த்து சத்தியாக்கிரகம் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார். அந்தச் சரித்திரப் பிரசித்தி பெற்ற நிகழ்ச்சியை நினைவு படுத்தும் வண்ணம், காந்தி நூற்றாண்டு விழாக் கமிட்டியார், அவர் தங்கியிருந்த வீட்டுக்கு நேராக, அதை நினைவுபடுத்தும் ஞாபகார்த்தக் கல் பதித்திருக்கிறார்கள். அதை ஜே. பி. கிருபளானி திறந்து வைத்தார். டாக்டர் சுசிலா நய்யார், சங்கரராவ் தேவ், பக்தவத்சலம், சென்னை மேயர் அபிபுல்லா பேக், சித்ரா நாராயணசாமி முதலியோர் பேசினார்கள். திரு மகாலிங்கம் வரவேற்றார். திரு ராதா கிருஷ்ணன் முடிவில் நன்றி செலுத்தினார்.

### காமகோடியின் கருணைமொழி



குழந்தை, பண்ணுருட்டிப் பொம்மைக்காரன் செய்யும் மண் பொம்மையைப் பார்த்தால் உள்ளே பலாச்சுளை ! இருக்கிறது என்றே நினைக்கும். இது குழந்தைகளுக்கு மாத்திரம் தோன்றும் மாயை. மண், பெண், பொன் இவற்றைப் பார்த்து மாயையில் சிக்குவது எல்லோருக்கும் ஏற்படும் மருள். பூமாலையைப் பார்த்துப் பாம்பு என்று தோன்றும் மருள் இருட்டில் சரியாகக் கவனிக்காதவனுக்கு ஏற்படுவது. நாமும் அஞ்ஞான இருட்டில் தவறாகப் பார்க்கிறோம். நாம் பார்ப்பது பொய் என்று அறிந்து கொள்ள வேண்டும். வேதாந்த சாஸ்திரப் படிப்பினால் இவ்வித அறிவு ஏற்படலாம். ஆனால் அறிவு வந்தால் போதாது; அவன் அருளால் கிடைக்கும் அநுபவமும் வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ராஞ்சியில் உள்ள கனரகப் பொறி இயல் கார்ப்பரேஷன் பற்றி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' தலையங்கம் கூறுவது:

> ராஞ்சியிலுள்ள ராட்சத நிறுவனமான கனரகப் பொறி இயல் கார்ப்பரேஷனுக்கு அஸ்திவாரமிட்ட வேளை சுபமுகூர்த்தமல்ல போலும்! ரூ. 244 கோடிக்குக் குறைவில்லாமல் செலவிட்டு ஒன்பதாண்டுகளுக்கு முன் நிறுவப்பட்ட இந்தத் தொழிலகத்தில் ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்கிறது. இப்போதே இக் கார்ப்பரேஷனின் நிதி நிலைமை சிவப்பு விளக்குக் காட்ட வேண்டிய ஸ்திதியில் உள்ளது. இன்றைய ரீதியே தொடருமாயின் நிதி நிலைமை மிக மிக மோசமாகும். ராஞ்சித் தொழிற்சாலைகளில் பல இயந்திரங்கள் பெருமளவுக்கு உபயோகத்துக்கு வராமல் இருப்பது பற்றிப் பார்லிமெண்டரி கமிட்டி எடுத்துக் காட்டியிருப்பது ஒரு நல்ல சேவையாகும். இக்கமிட்டி தொழிற்சாலையின் செயல் முறையிலுள்ள சில குறைகளையும் வெளிச்சம் போட்டுக் காட்டியுள்ளது. உடனடியாகமுன்னேற்றம் காணாவிடில், 1970–71லிருந்து ஆண்டுதோறும் ராஞ்சி கார்ப்பரேஷனுக்கு ரூ. 34 கோடிக்கு மேல் நஷ்டம் ஏற்படும் என்றும் கமிட்டி எச்சரித்துள்ளது.

* * *

ராமேசுவரம் ஆலயத்தில் எழுதப்பட்டிருந்த சம்ஸ்கிருத சுலோகங்கள் அழிக்கப்பட்டது குறித்துத் தமிழக அரசாங்கத்தின் பிரதம காரியதரிசி வெளியிட்டுள்ள அறிக்கை இவ்விவகாரத்தை விளக்குகிறது. அறிக்கை வருமாறு:

> இந்த அரசாங்கத்தின் உத்தரவுப்படி ராமேசுவரம் ஆலயத்தில் சம்ஸ்கிருத சுலோகங்கள் அழிக்கப்பட்டதாகத் தங்களுக்கு வந்த கடிதத்தில் கூறப்பட்டிருப்பது முற்றிலும் தவறானது; இதற்கு ஆதாரமே இல்லை. இந்த ராஜ்யத்தில் உள்ள எந்தக் கோயிலிலும் சம்ஸ்கிருத சுலோகங்களை அழிக்குமாறு அரசாங்கம் உத்தரவிடவில்லை. எனினும் ஒரு விஷயம்: 22–12–67 அன்று ஹிந்தி எதிர்ப்பு இயக்கத்தில் ஈடுபட்டிருந்த மாணவர்கள், ராமேசுவரம் ஆலயத்திலிருந்த சம்ஸ்கிருத சுலோகங்களை ஹிந்தி என்று தப்பாக எண்ணி; அவற்றின் மீது தார் பூசியதாக அரசாங்கத்துக்குத் தகவல் கிடைத்தது.

* * *

அதிகாரமே கெடுதலுக்குக் காரணம் என்றார் ஆக்டன் பிரபு. அதிகாரம் மனத்தை மட்டுமின்றி, புரிந்து கொள்ளும் உணர்வையே கெடுக்கிறது என்று ஆக்டனுக்கு முன்பே பர்க் சொன்னார். அதிகாரத்தை விடாமல் காத்துக் கொள்ள வேண்டும் என்ற விருப்பமே காமம். தீயைப் புகை சூழ்ந்து கொள்வது போல், விவேகத்தைக் காமம் சூழ்ந்து கொண்டு, மக்களை அவர்களது சங்கற்பத்துக்கும் மாறாகத் தீமைக்கு இட்டுச் செல்கிறது. இதை ஆக்டனுக்கும், பர்க்குக்கும் முன்பே கண்ணபிரான் எடுத்துச் சொல்லி யிருக்கிறான்.

* * *

எவ்விதச் சுங்கமும் தடுப்புமின்றி சுதந்திரமாகச் சர்வதேச வர்த்தகம் நடைபெற வேண்டும் என்று கனவு காண்கிறேன். எதிர்கால உலக அமைப்பைப் பற்றித் தீர்க்க தரிசனத்துடன் சிந்திக்கும் நிபுணர் எவரும் நான் காணும் கனவைப் பரிசீலிக்க மாட்டாரா? சுதேசப் பாதுகாப்பு, சர்வதேசத் தொழிற் போட்டி இவற்றுடனேயே நின்றுவிடும் இன்றைய நாகரிகம் எங்கும் கொண்டுவிடாத மொட்டைப் பாதைக்குச் சமமேயாகும். இம் முட்டுக்கட்டையைத் தகர்த்து, தொழிலிலும் வர்த்தகத்திலும் சர்வதேசக் கூட்டுறவுக்கு நாம் வழி காண வேண்டும். இதைச் செய்தால்தான் நாம் உலக அரசாங்கம் ஏற்படுவது பற்றியும், போர் ஒழிப்பு பற்றியும் நம்பிக்கை கொள்ள முடியும். அல்லது, ஒருவேளை இவ்வாறு விரும்புவதே பைத்தியக்காரத்தனமா?

* * *

சோஷலிஸம் என்ற பெயரில் ஏழைகளுக்கு நன்மை செய்வதாகச் சொல்லிக் கொள்பவர்களுக்கு மதுவிலக்கு ஒரு சோதனை. சர்க்காரின் வரவையும், செலவையும் ஈடுகட்டுவதற்காக மதுவிலக்கை ரத்து செய்து பணம் திரட்டுவது நரமாமிச பட்சணத்துக்கொப்பாகும். மக்களை நாசத்தில் ஆழ்த்தும் மதுவை அவர்களுக்குத் தந்து, அதிலிருந்து வரியைப் பிழிந்து எடுத்துக் கொள்வது மக்களின் தசையையும் எலும்பையும் உண்பதற்கே ஒப்பாகும். அரசாங்கம் மக்கள் நலனுக்கு ஏற்பட்டது; நிதி இலாகாவின் கணக்கில் திருப்தி ஏற்படுத்துவதற்காக ஏற்பட்டதல்ல. சர்க்கார் நடத்துவதற்காக மதுவிலக்கை ரத்து செய்து பரம ஏழையரை மேலும் ஏழையராக்குவது அனர்த்தமாகும். வரவையும் செலவையும் சரிக்கட்டுவது நல்லதுதான். ஆனால் இதற்காக, அரசாங்கம் ரட்சிக்க வேண்டிய குடும்பங்களின் பசியையும் வறுமையையும் அதிகமாக்கிவிடக் கூடாது.

ஏழைகளின் வாழ்நிலையை உயர்த்துவதற்காக ஒரு சர்க்கார் உண்மையிலேயே நடவடிக்கை எடுக்கிறதா, அல்லது மக்களின் வாக்குகளைப் பெறுவதற்காக சோஷலிஸ கோஷமிட்டு அவர்கள் வாழ்நிலையை உயர்த்துவதாக வாக்குறுதி தருவதோடு நின்று விடுகிறதா என்பதே சர்க்காரின் நேர்மைக்கு உரைகல். மக்களின் விருப்பத்துக்கும் எதிராக அவர்களுக்கு அரசாங்கம் நன்மை செய்தாலே அது நேர்மைப் பரீட்சையில் வென்றதாகும். மதுப் பழக்கமுள்ளவர்கள் மதுவை விரும்பத்தான் செய்வார்கள். அதற்கும் எதிராகச் சென்று அவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும்.



புதுதில்லியில் உலக சமாதானத் தூதர்கள் பலர் வந்து அரசியல் ரீதியில் பேச்சுக்கள் நடத்துவது சகஜம்; உலக சமாதானம் என்ற இதே நோக்கத்துக்காகச் சாஸ்திரக்ஞர்கள் கூடி யக்ஞம் செய்வதோ அங்கு வெகு துர்லபம். வட இந்தியா கடந்த நாற்பதாண்டு களில் கண்டிராத ஒரு மகத்தான வேள்வி ஏப்ரல் 2ந் தேதியிலிருந்து மே மாதம் 8ந் தேதி வரை புது தில்லியில் நடைபெற்றது. வானத்தில் சஞ்சரிக்கும் கோள்களுக்குப் பிரீதி செய்து உலக சமாதானத்தைக் கோரும் இந்த 'நக்ஷத்திர இஷ்டி' ஸ்ரீ காஞ்சி ஆசாரி யாளின் ஆக்ஞையின் கீழ் நடைபெறுகிறது. வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையினரும், அகில பாரதீய சம்ஸ்கிருத சாகித்திய சம் மேளனத்தினரும், சங்கர அகாதெமியினரும் முன்னின்று இந்தப் புனித காரியத்தைச் செய்கின்றனர்.

அண்மையில் திருக்குறள் பாக்கள் சில வற்றை இசைத்தட்டில் சீர்காழி திரு கோவிந்தராஜன் பாட, அவற்றுக்கு அண்ணா மலை பல்கலைக் கழக விரிவுரையாளர் திரு ஷண்முகம் விளக்கம் தர, இவ்விசைத் தட் டுக்கள் தமிழக முதன்மந்திரி திரு அண்ணா துரை அவர்கள் முன்னிலையில் வெளியிடப் பட்டன.

○

சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகக் கோவையில் திரு பின்னி சுப்பா ராவ் அவர்கள் ஸ்ரீ ராமநவமி உற்சவம், விசேஷமான சங் கீதக் கச்சேரிகள், ஹரிகதைகள், உபந்நி யாசங்களுடன் வெகு சிறப்பாக நடத்தி வரு கிறார். இந்த வருஷத்திய ராமநவமி வெள்ளி விழா உற்சவத்தைக் கோவைப் பொது மக்கள், பின்னி சுப்பாராவ் தம்பதிகளுக்கு நன்றியும் பாராட்டும் தெரிவிக்கும் பெரு விழாவையும் சேர்த்து நடத்திச் சிறப்பித்து விட்டார்கள். ஸ்ரீராமநவமி உற்சவக் கடைசி நாளான ஏப்ரல் 11-ம் தேதி சேங்காலிபுரம் பிரும்ம ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதரும் ஸ்ரீ நாரா



யண தீக்ஷிதரும் பத்து நாட்களாக நடத்தி வந்த ராமாயண உபன்யாசம் ஸ்ரீ ராம பட் டாபிஷேகத்துடன் இனிது நிறைவுற்றது. அன்று மாலை தொழிலதிபர் திரு ஜி. வேங்கட சாமி நாயுடு அவர்கள் ராம பட்டாபிஷேகம் கொண்ட டாலருடன் தங்கச் சங்கிலியைப் பொதுமக்களின் அன்பளிப்பாக ஸ்ரீ சுப்பா ராவுக்கு அணிவித்தார். திரு பி. ஏ. ராஜு செட்டியார் அவர்கள் ஸ்ரீ ராம லக்ஷ்மண பரத சத்ருக்ன ஸீதா ஹநுமாருடன் கூடிய வெள்ளி விக்கிரகத்தை ஸ்ரீ சுப்பாராவ் தம்பதிகளுக்குப் பொதுமக்க ளின் சார்பாக அளித்தார். சக்கரவர்த்தி ஸ்ரீ ராஜகோபா லாச்சாரியார் "நல்ல மனித ருடைய நல்ல செயலைப் பாராட்டும் கோவை மக்களைப் பாராட்டுகிறேன்!" என்று ஆசி வழங்கி யிருந்தார். பொதுஜனக் குழுத்தலைவரும் லக்ஷ்மி மில்ஸ் அதிபருமான திரு ஜி. கே. தேவ ராஜுலு நன்றி கூற வைபவம் விமரிசையாக நிறைவேறியது.





# குருவியார் பேட்டி



குருவியார் வான மண்டலத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது ட சார்மினார் கோபுரங்கள் வான வீதியில் பாதி தூரம் வந்து குருவியாரைத் தடுத்து ஆட்கொண்டன. ஹைதராபாத் சார்மினார் கோபுரத்தின்மீது அமர்ந்திருந்த குருவியார் காதில் படபடவென்று யாரோ பொரிந்து தள்ளும் சத்தம் கேட்கவே திரும்பிப் பார்த்தார் ஆந்திரப் பிரதேசத்தின் விவசாய மந்திரி திம்மா ரெட்டி.

''ஏமி, ரெட்டிகாரு ஏமி கோபமு?'' என்று குருவியார் குசலம் விசாரித்தார்.

''உன்னைப் போன்ற திருபர்களால் வருகிற வினைதான். நான் சொல்லாததை யெல்லாம் சொல்லியதாகப் போட்டு இப்போ என் உத்தியோகத்துக்கே உலை வைத்து விட்டார்கள்!''

''ஓ! அந்த ஹரிஜனங்களை உதைக்க வேண்டும் என்று காரமாகச் சொன்னீரே, அந்த விஷயமா?''

''பார்த்தீரா? நீரும் ஆரம்பித்து விட்டீரே! நான் அப்படிச் சொல்லவில்லை ஐயா!'' என்றார் திம்மா ரெட்டி.

''ரெட்டிகாரு! நீர் இந்தத் தடவை சொன்னீரோ சொல்லவில்லையோ ஆனால் உம்மைத் தெரிந்தவர்கள் எல்லாம் இதுதானா சொல்லக் கூடியவர்? இதற்கு மேலே கூடச் சொல்லக் கூடியவர் என்கிறார்களே, ஐயா! இப்படியொரு நல்ல பெயரை வாங்கி வைத்துக்கொண்டிருக்கிறீர். என்ன செய்வது?'' என்றார் குருவியார்.

''குருத் துரோகம் செய்ததன் விளைவுதான் குருவியாரே!''

''என்ன? என்ன சொல்கிறீர்?''

''என். ஜி. ரங்காவின் சிஷ்யனாக வளர்ந்தவன்; அவரை விட்டு, பதவியாசை பிடித்துக் காங்கிரஸிலேயே இருந்ததன் விளைவு...''

''சாகிற காலத்திலே சங்கரா சங்கரா என்பது போல் இப்படிக் கஷ்டம் வந்த சமயத்திலே உம்ம குருவை நினைக்கிறீர் போலும்!''

இப்படிச் சொல்லிக் கொண்டே குருவியார் பறக்க முயன்று கொண்டிருக்கும் போதே, சோகமே உருவாய் வந்துகொண்டிருந்தார் சென்னா ரெட்டி காரு.

''என்ன ரெட்டி காரு, உம்ம தேர்தல் இவ்வளவு ஊழலா? நான் நினைக்கவே இல்லையே!'' என்றார் குருவியார்.

சென்னா ரெட்டி, ''யார் தேர்தல் ஒழுங்கு? ஏதோ என் போதாத காலம். என் குற்றம் நிரூபணமாகி விட்டது!'' என்றார்.

''இரும்பு பிடித்த கை இப்படித்தான். வேறு ஏதாகிலும் மந்திரி பதவி ஏற்றிருக்கக் கூடாதா?''

''யார் நாம் கேட்பதைக் கொடுக்கிறார்கள்? பார்க்கப் போனால் மத்திய மந்திரி சபையில் பதவியே கோரவில்லை. ராஜ்ய மந்திரி சபையில்தான் இருக்க விரும்பினேன். நான் இங்கேயே இருந்திருந்தால் தேசமே கூட ஒழுங்காக நடத்தியிருப்பேன்!'' என்றார் சென்னா ரெட்டி!

''உம்ம போதாத காலம் பாரும், பெரிய பதவி ரூபத்தில் வந்து தொலைந்தது! — எஃகு இரும்பு மந்திரி பதவி! எவ்வளவு கனமான பதவி!''

''என் தேர்தல் செல்லாது என்றதும் எவ்வளவு இலேசாகப் பதவியை விட்டுவிட்டேன் பார்த்தீரா?''

''எங்கே விட்டீர்? ஸ்டே ஆர்டர் வாங்கி ராஜ்ய சபைக்குப் போய் அங்கிருந்து மீண்டும் நுழையப் பார்த்தீரே! இந்தத் தந்திரம் தெரியாமலா இருக்கிறது? ரெட்டிகாரு! உம்மைச் சொல்லிப் புண்ணியமில்லை. பதவி ஆசை யாரை விட்டது! சொல்லும்'' என்றுசொல்லி விட்டுக்குருவியார் பறந்தார் தெற்கு நோக்கி.

''எந்தா சாமி, நம்பூதிரிபாடு? ஏன் இத்ர சோகம்?'' என்று கேரள முதல் மந்திரி ஈ. எம். எஸ். நம்பூதிரிபாடு அவர்களைக் குசலம் விசாரித்தார் குருவியார்.

''எந்தா குருவியாரே! நங்கள் சோகம் தன்னே நிங்கள்காரணம் அறியான்பாடில்லே? ஏன் வெந்த புண்ணில் கோலை விட்டுக் குளறுகிறீர்?'' என்றார் ஈ. எம். எஸ்.

''முனிசிபல் தேர்தல்லே கூட்டணி தோற்றுப் போனதற்குக் காரணம் சட்டத்தையும் அமைதியையும் ஒழுங்காக நிலைநாட்டாததுதான்'' என்று பளிச்சென்று மண்டையில் போட்டார் குருவியார்.

''அப்படி என்ன அமைதிக்குக் கேடு..?''

''திருவாங்கூர் ராஜ குடும்பத்தினர் போலீஸ் பந்தோபஸ்தில்லாமல் படாத பாடுபட்டனர் என்று கேள்விப்பட்ட பிறகும் ராஜ்ய மக்கள் உம்மைச் சும்மா விட்டு வைப்பார்களா? திருவாங்கூர் மகாராஜா, எந்த அரசியல் கட்சியிலும் சேராமல் ஒதுங்கி யிருப்பவருக்கே இந்தக் கதி என்றால் பாமர மக்கள் எவ்வளவு கஷ்டப்படுகிறார்களோ! மாலூர் சம்பவம் போதாதா? மூன்று நாட்களுக்குக் குழந்தைக்குப் பால்கூட அனுப்பாமல் சூழ்ந்துகொண்டு தொழிலாளர் கலாட்டா செய்ததை அரசாங்கமும் போலீசும் ஒன்றும் செய்யாமல் பார்த்துக் கொண்டுதானே இருந்தது! இத்தகைய அரசாங்கம் ஒருசில தொழிலாளரிடையே சற்று அனுதாபம் பெறலாம். ஆனால் பொது மக்கள் இத்தனை நாட்கள் உங்களை அனுமதித்ததற்கு வருத்தப்படுகிறார்கள் என்பதுதான் இந்தத் தேர்தல் முடிவுகளின் பொருள்.''

''எந்தா குருவியாரே! நிங்களே எங்களைக் காலை வாரி விடுகிறீரே!''

''காலை வாரிவிடவில்லை—சத்யம்பறஞ்ஞு'' என்று சொல்லிக் குருவியார் பறந்தார்.

— எஸ். வி. எஸ்.

# இலங்கைக் காட்சி-4



இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும், கிறிஸ்துவர்களுக்கும் பலமாதிரியான பண்டிகைகள் இருப்பதைப் போல் பௌத்தர்களுக்குப் பிரத்தியேகமான விசேஷ தினங்கள் பல உண்டு. அவற்றில் விசாக் பண்டிகைதான் மிக மிக முக்கியமானது. பௌத்தர்களின் புது வருடமும் இதிலிருந்துதான் ஆரம்பமாகிறது.

பகவான் புத்தர் இமயமலைச் சாரலிலே சுத்தோதனர் என்ற சிற்றரசரின் புதல்வராக அவதரித்தது வைகாசி மாதப் பௌர்ணமியில். புனித போதி விருக்ஷத்தின் அடியில் ஞானோதயம் பெற்றதும், எண்பதாம் வயதில் குசிநரா என்ற இடத்தில் பரிநிர்வாணம் அடைந்ததும் இதே வைகாசி பௌர்ணமியில்தான்.

இலங்கைக்கோ இத்தினத்தில் இன்னொரு விசேஷம் உண்டு. புத்தர் பரிநிர்வாணம் அடைந்த அதே தினத்தில்தான் சிங்கள வம்சத்தின் ஆதி பிதா எனக் கருதப்படும் விஜயன் என்ற வங்கத்து இளவரசன் 700 சகாக்களோடு இலங்கையில் அடியெடுத்து வைத்ததாகப் பாலி வரலாறு நூல் கூறுகின்றது. ஆகவே சிங்கள பௌத்தர்களுக்கு இந்தத் தினம் தங்களின் வம்சத்தின் ஆதி முதல்வனை நினைவுகூரும் நாளாகவும் அமைந்துள்ளது. மே மாதம் 11ந் தேதி அகில இலங்கையிலும் உள்ள பௌத்தர்கள் இதை வெகு சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இலங்கை முழுதும் தீப ஒளியாக இருக்கும். புத்த பிரானின் புனிதப் பல் யானையின்மீது வலம் வரும் காட்சியைக் காண மக்கள் வெள்ளம் கூடி நிற்கும்.

— கே. வி. எஸ். மோகன்

விஞ்ஞானிகள் வரிசை

# அணுசக்தி அறிஞர்

பழைய கதை ஒன்று உண்டு. சமுத்திர அலை கரை சேர்த்த ஜாடியை அவ்வழியே சென்ற ஒருவன் திறந்தானாம். உடனே ஜாடிக்குள்ளிருந்து ஒரு பூதம் வெளிப்பட்டதாம்! அதைக் கண்டு மிரண்ட அந்த வழிப்போக்கன் அதை எப்படி உள்ளே போகச் செய்வது என்று திணறியிருக்கிறான் பிறகு எப்படியோ தந்திரம் செய்து உள்ளே அடைத்தானாம். அதைப் போலத்தான், இன்றைய உலகம் அணு சக்தி சம்பந்தமாகத் திணறிக் கொண்டிருக்கிறது. அணுவைப் பிளந்து அதன் அபரிமிதமான அழிவுச் சக்தியைக் கண்ட மனிதன், ஆக்க ரீதியில் பயன்படுத்த அரும் பாடுபட்டு வருகிறான்.

அணு சக்தியின் உதவியால் விவசாயம், வைத்தியம், பொறி இயல், மின்சாரம் இப்படிப் பல துறைகளில் ஆக்க ரீதியான பலனைப் பெற வழியுண்டு. அதனைப் பாரத நாட்டுக்கு முழு அளவில் பெற்றுத் தர ஊக்கமும் உற்சாகமும் கொண்டு உழைத்தவர் காலஞ்சென்ற எச். ஜே. பாபா அவார். பம்பாய் டிராம்பேயில் முதன் முதலில் ''அப்ஸரா'' என்ற அணு சக்தி மாதிரி தொழிற்கூடம் அமைக்கத் திட்டமிடப் பட்டது. சுமார் ஐம்பது இளம் விஞ்ஞானிகளின் தொண்டினைப் பெற்றார் பாபா. அவர்களின் உற்சாகமான உழைப்பின் காரணமாக, ஆரம்பித்த ஓராண்டு காலத்தில் ''அப்ஸரா'' முடிவு பெற்றது.

அப்ஸரா நிர்மாணத்தில் பங்கு பற்றிய பொறி இயல் விஞ்ஞானிகளில் ஒருவரான டாக்டர் மாலூர் சீனிவாசன் இன்று சென்னைக்கு அருகில் கல்பாக்கத்தில் நிறுவப்பட்டு வரும் அணுசக்தி நிலையத்தின் முக்கிய அமைப்பாளராகப் பொறுப்பேற்றிருக்கிறார்.

டாக்டர் எம். ஆர். சீனிவாசன் பங்களூரில் 1930ல் பிறந்தார். அங்கேயே பொறி இயல் கல்லூரியில் பயின்று, மிக உன்னதமான புகழுடன் தேறினார். அதன் விளைவாக 1951 கொழும்புத் திட்ட உபகாரச் சம்பளம் பெற்று மேல் படிப்புக்கும் ஆராய்ச்சிகள் நடத்தவும் கானடா நாட்டுக்குச் சென்றார். அங்கு மான்டிரீல் என்னும் நகரத்திலுள்ள மாக்கில் சர்வகலாசாலையில் ஆராய்ச்சிக்கூடத்தில் மூன்று ஆண்டுகள் ''வாயுக்களின் இயக்க சக்தி'' பற்றி ஆராய்ச்சிகள் நடத்தி 1954ல் டாக்டர் பட்டம் பெற்றார். அவர் அங்கிருந்தபோது ஜெட் விமானங்களின் அமைப்புகள் பற்றியும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டிருக்கிறார்.



எம். ஆர். சீனிவாசன்

இங்கிலாந்தில் லிங்கன் என்ற நகரில் தொழில் துறைக்கு உபயோகமாகும் வாயுக்களைச் சிருஷ்டித்தும் அடைத்தும் விற்கும் தொழிலகத்தில் சிறிது காலம் வேலை பார்த்தார். இங்கு இவர் வேலை செய்து வந்தபோதுதான் டாக்டர் ஹோமி பாபா இவரைச் சந்திக்க நேர்ந்தது. இவரது ஆராய்ச்சிப் புலமையையும் யந்திர அமைப்பு பற்றிய அறிவாற்றலையும் உணர்ந்த பாபா இவரைப்பாரதத்துக்கு அணு சக்தி நிறுவனத்தின் டிஸைன் என்ஜினீராக வரும்படி அழைத்தார். என்ஜினீரிங் ஆராய்ச்சிக் கூடத்தின் தலைவராகப் பணியாற்றிய போது, அணு 'ரியாக்டர்' வெளியிடும் அபாரமான வெப்பத்தை எப்படி மாற்றிச் சமாளிப்பது, அபாரமான உஷ்ணத்தோடு வெளியாகும் திரவங்களைச் சமாளிப்பது எவ்வாறு என்பன போன்ற பிரச்னைகளுக்கு மிக வெற்றிகரமாகப் பரிகாரம் கண்டு 'டிஸைன்'கள் தந்திருக்கிறார் டாக்டர் சீனிவாசன். அதனால் தான் பெரிய அளவில் நாட்டுக்கு வேண்டிய அணுசக்தி நிலையத்தை நிறுவத் தக்க இடம் தேர்ந்தெடுக்க ஒரு குழு நியமிக்கப்பட்டபோது, அதில் டாக்டர் சீனிவாசனையும் சேர்த்தார்கள். நான்கு ராஜ்யங்களில் சுமார் இருபது இடங்களைப் பார்த்துவிட்டுக் கடைசியில் பம்பாயிலிருந்து எண்பது மைல் தொலைவில் உள்ள ''தாராபோர்'' என்ற இடத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். அங்கு டாக்டர் சக்கரவர்த்தி, டாக்டர் தயாள் ஆகியவர்களுடன் டாக்டர் சீனிவாசனும் சேர்ந்து பணியாற்றி அணு சக்தி நிறுவனத்தை உருவாக்கியிருக்கிறார்.

1966ல் வியன்னாவில் நடைபெற்ற அகில உலக அணுசக்தி விஞ்ஞானிகள் மகாநாட்டுக்கு அழைக்கப்பட்டார், டாக்டர் சீனிவாசன். அங்கு குறைந்த செலவில் பொறி இயலுக்கு அணுசக்தி எப்படிப் பயன்படுகிறது என்பதை விளக்கிச் சொற்பொழிவு ஆற்றினார்.

டாக்டர் சீனிவாசன், ஜெனிவா, இங்கிலாந்து முதலிய இடங்களில் நடைபெற்ற எத்தனையோ அணு சக்தி விஞ்ஞானிகள் மகாநாடுகளுக்குச் சென்று பங்கு பற்றித் தமக்கும் நாட்டுக்கும் புகழ் சேர்த்திருக்கிறார்.

இப்பொழுது கல்பாக்கத்தில் அவர் மேற்பார்வையில் உருவாகும் நிறுவனம் தமிழகத்துக்கு மகத்தான தொண்டு புரியும்.

டாக்டர் சீனிவாசனுக்கு விண்வெளி ஆராய்ச்சியிலும் ராக்கெட் பொறி இயலிலும் தீவிரப் பற்று உண்டு.

ஆதாரம்: 'ஹிந்து


கருத்தைக்
கவரும்
கோயா
விந்தைப்
படைப்பு
இது நாள் வரை நீங்கள்
கனவிலே கண்டு
நெஞ்சத்தைப்
பறிகொடுத்து வந்த
நறுமணப் பவுடரை
நனவாக்குகிறது,
புதுமுறையில் அமைந்த
கோயா. பனித்துளிக்கு
நிகரான இந்த பவுடர்
இந்த நாள் வரை
கண்டிராதபடி மைய
அரைக்கப்பட்டதும்
மிருதுவானதும் ஆகும்.
அது மட்டுமா? கோயா
நிபுணர்கள் இதில் புகுத்தி
யுள்ள பரிமளம் நாள் முழு
தும் நிலைத்து, புத்தம்புதிய
சுகந்தத்தைப் பரப்பிக்
கொண்டே இருக்கும்.
புதுமை மணம்
பொருந்திய 'பிளாக்
ரோஸ்' பூத்த புது
மலரின் வாசனை
வீசும் 'கார்டீனியா',
உள்ளத்தை அள்ளும்
'பாஸ்போர்ட்'—
நீங்கள் தேர்ந்தெடுக்க
இத்தனை நல்ல வாசனை
ரகங்களில் கோயா
கிடைக்கிறது. நெடு
நாள் நீடிக்கும் உயர
மான புதிய டின்னில்
மூன்றுமே வருகின்றன
என்பதை மறவாதீர்.
PASSPORT
GARDENIA
BLACK ROSE
புதிய முறையில்
அமைந்த உயரமான
புதிய டின்னில் கிடைக்கும்
அருமையான பவுடர்
இந்த நறுமண
பவுடரைத்
தயாரிப்போர்
கோயா
பாரிஸ்
லண்டன்
நியூயார்க்
அட்லான்டிஸ் (ஈஸ்ட்)
லிமிடெட்
(இங்கிலாந்தில்
இணைக்கப்பட்டது)
AGC-5 TH


நாளொரு மேனியாக
அழகுறவே...மேலும் அழகுறவே...மேன்மேலும் அழகுறவே
கேடில் அடங்கிய ரெக்ஸோனா ஆதரவே
Rexona
GOOD FOR YOUR SKIN
4 அழகுத் தைலங்களின்
கலவையாகிய கேடில்
அடங்கியது
ரெக்ஸோனா ஒன்றுதான்
நீராடிய பிறகும் நீடித்து நிலவி
நெஞ்சையள்ளும்
செறிப்பான நறுமணம்
கமழ்வது ரெக்ஸோனா.
ஹிந்துஸ்தான் லீவர் தயாரிப்பு
லின்டாஸ்-RX. 32-140 TM

நினைவிருக்கிறதா?



# முதல் விதவா விவாகம்

◆ 'நந்தலால்'

அந்தக் காலத்தில் பொம்மைகளுக்கு விளையாட்டுக் கல்யாணம் செய்துவைப்பது போல் பத்து வயதுச் சிறுவனுக்கும் ஏழு வயதுச் சிறுமிக்கும் விவாகம் செய்து வைக்கும் வழக்கம் இருந்து வந்தது. இந்தத் தம்பதிகளில் புருஷன் இரண்டொரு வருஷத்தில் இறந்து விட்டால் மனைவி விதவைக் கோலம் பூண்டு வைராக்கிய வாழ்க்கையை அச் சிறு வயதிலேயே மேற்கொள்ள வேண்டும். இது கொடுமையிலும் கொடுமை என்றுணர்ந்து ஈசுவர சந்திர வித்தியா சாகர் அரசாங்கத்தினிடம் விளக்கி விதவைகள் மீண்டும் திருமணம் செய்து கொள்ளலாம் என்கிற சட்டத்தை நிறைவேற்றக் காரணமாக இருந்தார். 1856ல் ஹிந்து விதவா விவாகச் சட்டம் நிறைவேறியது. 1856 ஜூலை 26ந் தேதி இச்சட்டம் அமுலுக்கு வந்தது.

இதே ஆண்டு டிசம்பர் மாதம் 7ந் தேதி முதல் ஹிந்து விதவா விவாகம் வட கல்கத்தாவில் 48, கைலாஸ போஸ் தெருவில் 'ஜாம் ஜாம்' என்று நடைபெற்றது. திருமணம் நடைபெற்ற இடம் ராஜகிருஷ்ண பந்தோபாத்யாயா என்கிற பேராசிரியருடையது. இவர் வித்யாசாகரரின் அத்யந்த நண்பர். இந்தத் திருமணம் நடைபெறத் தம் வீட்டைக் கொடுத்ததற்காக பந்தோபாத்யாயா ஜாதிப் பிரஷ்டம் செய்யப்பட்டார்.

திருமணப் பெண் காளிமதி தேவி, வயது 10. இவளுக்கு 7 வயதில் திருமணம் நடைபெற்று 9 வயதில் கணவனை இழந்து விதவையானாள். காலஞ்சென்ற பிரம்மானந்த முகோபாத்யாயாவின் ஒரே மகள். மணமகனும் ஒரு பிரபல வைதீக குடும்பத்தைச் சேர்ந்தவன்தான்.

இத் திருமணச் செய்தி அந்தக் காலத்தில் இருந்த எல்லாப் பத்திரிகைகளிலும் பிரதானமாகப் பிரசுரிக்கப் பட்டிருந்தது. வைதீகமாகவுள்ளவர்கள் அசம்பாவிதமாகத் தகராறுகளைக் கிளப்பிக் கலாட்டா செய்வார்கள் என்று எதிர்பார்த்து இந்தத் திருமணத்துக்குப் பலத்த போலீஸ் பந்தோபஸ்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மணமகள் பல்லக்கில் ஏறி மணமகன் இருக்கும் இடத்துக்கு வர வேண்டும். ஈசுவர சந்திர வித்யாசாகரே இப்பல்லக்கின் கூட நடந்து வந்தார். மற்றும் ராம் கோபால கோஷ், நீதிபதி ஹரன் சந்திர கோஷ், கல்கத்தா நீதி மன்றத்தின் முதல் இந்திய நீதிபதி சம்புநாத் பண்டிட் ஆகியவர்களும் இத் திருமணத்தை முன்னின்று நடத்தினர். வித்யாசாகரின் செலவில் இத்திருமணம் நடைபெற்றது.

இம்மாதிரி சமூக சீர்திருத்த விஷயங்களில் பொதுமக்களிடையே மனமாற்றம் ஏற்பட வேண்டும் என்பதை வித்தியாசாகர் அறிந்திருந்தார். இவர் சம்ஸ்கிருத நூல்களை நன்கு ஆராய்ந்து விதவா விவாகங்களுக்கு ஆட்சேபம் எதுவும் இல்லை என்பதை விளக்கி அதைப் பொதுமக்களிடையே பரப்பவும் செய்து வந்தார். ஏராளமான பால்ய விதவைகளின் கண்ணீரைத் துடைத்த மாபெரும் புண்ணியம் ஈசுவர சந்திர வித்யாசாகரரையே சேரும்.



ஈசுவர சந்திர வித்யாசாகர்





# அமெரிக்காவில் தமிழக முதல்வர்

தமிழக முதல்வர் திரு அண்ணாதுரை அவர்கள் அமெரிக்காவுக்கு விஜயம் செய்து அமெரிக்க மக்களையும் தலைவர்களையும் தம் பேச்சாலும் பண்பாலும் கவர்ந்துள்ளார்.

1. சென்னை விமான நிலையத்தில் தமிழக மந்திரிகளும் அமெரிக்க கான்சல் ஜெனரல் ஃபிராங்க்ளினும் வழியனுப்பி வைக்கிறார்கள்.

2. நியூயார்க்கில் ஐ. நா. இந்தியப் பிரதிநிதி திரு ஜி. பார்த்தசாரதி அளித்த வரவேற்பில் தமிழக முதல்வர்.

3. வாஷிங்டனில் லிங்கன் தேசியப் பொருட்காட்சி சாலையில் லிங்கன் உருவத்தைப் பார்வையிடுகிறார் அண்ணா.

4. சென்னை கவர்னர் தமிழக முதன் மந்திரியை அமெரிக்கா





வுக்கு மலர்ச்சியுடன் அனுப்பி வைக்கிறார்.



5. நியூயார்க்கில் இந்திய மாணவர்களோடு தமிழக முதன் மந்திரி அளவளாவுகிறார்.

6. யேல் சர்வ கலாசாலை முதன் மந்திரி திரு அண்ணா துரை அவர்களுக்கு 'சப் பெல்லோஷிப்' கௌரவத்தை வழங்கியது. யேல் சர்வகலா சாலையில் ஒரு வாரம் கழித்த திரு அண்ணா அவர்கள் டிமோத்தி டுவைட் கல்லூரி மாணவர்களுக்குத் திருக்குறள் வகுப்பு நடத்துகிறார்.



தமது சுற்றுப் பயணத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு தமிழகத்துக்கு அமெரிக்க மக்களின் நல்லெண்ணத்தை மிகச் சிறப்பான முறையில் பெற்றுத் தந்துள்ள நமது முதல்வர் இம்மாதம் இரண்டாம் வாரத்தில் தாயகம் திரும்புகிறார்.

அவரை வாழ்த்தி வரவேற்கத் தமிழ் நாடு ஆவலுடன் காத்திருக்கிறது.

காய்கறி தோட்டங்களுக்கு **மேனன்** டீசல் விளைச்சலைப் பெருக்க **மேனன்**
டீசல் உண்மையான சிக்கனத்திற் ... சல் நீடித்த சேவைக்கு **மேனன்**
டீசல் எண்ணை செலவைக்குறை ... ல் சிக்கன முறையில் புதுப்பிக்க
**மேனன்** டீசல் வேளாண்மை ... **னன்** டீசல் நீர் இறைத்து
பயிரிடும் வேலைகளுக்கு **மேன** ... வேலைகளுக்கு **மேனன்** டீசல்
காய்கறி தோட்டங்களுக்கு ... விளைச்சலைப் பெருக்க **மேனன்**
டீசல் உண்மையான சிக் ... நீடித்த சேவைக்கு **மேனன்**
டீசல் எண்ணை செலவை ... க்கன முறையில் புதுப்பிக்க
**மேனன்** டீசல் வேள ... டீசல் நீர் இறைத்து
பயிரிடும் வேலைகளுக்கு ... ணை வேலைகளுக்கு **மேனன்** டீசல்
காய்கறி தோட்டங்களுக் ... விளைச்சலைப் பெருக்க **மேனன்**
டீசல் உண்மையான சிக் ... டித்த சேவைக்கு **மேனன்**
டீசல் எண்ணை செலவைக ... க்கன முறையில் புதுப்பிக்க
**மேனன்** டீசல் வேளாண்மை ... **மேனன்** டீசல் நீர் இறைத்து
பயிரிடும் வேலைகளுக்கு **மேனன்** ... பண்ணை வேலைகளுக்கு **மேனன்** டீசல்
காய்கறி தோட்டங்களுக்கு **மேனன்** டீசல் விளைச்சலைப் பெருக்க **மேனன்**



* 5 HP. 1500 RPM Diesel engine

தமிழக அரசு அங்கீகாரம் பெற்றவை

# மேனன்

## டீசல்கள்

தயாரிப்பாளர்கள்

**மேனன் & மேனன்**

விக்ரம்நகர், கோலாப்பூர்
மஹாராஷ்ட்ர ராஜ்யம்

தமிழகம், கேரளாவுக்கு ஏகபோக வினியோகஸ்தர்கள்

**ஆர்வீ & கம்பெனி**

52, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, மதரஸ்–2
போன் 88746–தந்தி "ARVEECO"



6 HP. 650 RPM Crude Oil engine

HH.102 TM

# 'அவன் தோல் வெளுப்பு; நம் தோல் கறுப்பு!'

"நானோ முதல் நானும் அவர்களோடு பள்ளிக்கூடம் போகட்டுமா?"

"யாரோடு?"

"ராபர்ட்டோடும், சாம்புவேலோடும் தான்!"

"உன்னைச் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள்!"

"ஏன்?"

"நம் தோல் கறுப்பு; அவர்கள் தோல் வெளுப்பு."

திரர் சத்தியமூர்த்தியின் மேடைப் பேச்சை நினைவுபடுத்தும் இந்தச் சொல் மார்ட்டின் லூதர்கிங்கின் அன்னை கூறியவை.

1929ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பதினைந்தாம் தேதி ஜார்ஜியா மாகாணத்தில் அட்லாண்டா பகுதியில் பிறந்த கிங் ஆறு வயது அறியாப் பாலகனாக இருந்த பொழுது நடந்த நிகழ்ச்சி இது. அவரது வயதையொத்த இரு அமெரிக்கப் பிள்ளைகள் அவரது இணை பிரியாத் தோழர்கள். அவர்களோடு விளையாடுவதைப் போலவே, பள்ளியிலும் போய்ப் படிக்க வேண்டும் என்ற ஆசை அவருக்கு.



"ஏன், அம்மா! நம் தோல் கறுப்பாயிருந்தாலும், அவர்கள் தோல் வெளுப்பாயிருந்தாலும், இருவருடைய உடலுக்கு உள்ளே ஓடும் இரத்தம் ஒரே மாதிரிச் சிவப்பாகத் தானே இருக்கிறது?" என்று கேட்டார்.

கிங்கின் அறிவார்ந்த பேச்சைக் கேட்ட அன்னை அகமகிழ்ந்து போனாள். "உணர்ச்சியும் அறிவும்கூட ஒரே மாதிரித்தான் குழந்தாய்! அவன் எவ்வளவு நல்லவனோ, அவ்வளவு நல்லவன்தான் நீயும்! ஆனால் மக்கள் சமுதாயத்திலே புரையோடிவிட்ட இந்த நிற வேற்றுமையைப் போக்குவது எப்படி? இதுதான் இன்று வரை விளங்காப் புதிராக இருக்கிறது!" என்றாள்.

அன்று கிங்குக்கும் அது புரியக்கூடிய வயதல்லவே! இருந்தாலும் அவர் மனத்தில் அன்னையின் சொல் நெருஞ்சி முள்ளெனத் தைத்தது.

அதற்குச் சில நாட்களுக்குப்பின், கிங் பள்ளியில் சேர்க்கப்பட்டார். தன் தனயன் பள்ளிக்கூடம் போய்வர நல்ல பூட்ஸாக வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் கிங்கின் தந்தை. எனவே, ஒரு நாள் மாலை அவரை அழைத்துக் கொண்டு செருப்புக் கடை ஒன்றினுள் நுழைந்தார். முன்னே போட்டிருந்த ஆசனமொன்றில் தாமும் அமர்ந்து தமது மகனையும் அமர்த்திக் கொண்டார்

விற்பனையாளர் ஒரு வெள்ளையர். கறுப்பர் ஒருவர் முன் ஆசனத்தில் உட்கார்ந்திருப்பதைக் காண அவருக்கு முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. "என்ன வேண்டும் உனக்கு? பின்னால் போய் உட்காரு!" என்று ஆத்திரத்துடன் கூறினார்.

"இந்தப் பையனுக்கு ஒரு பூட்ஸ் வேண்டும். இங்கே உட்கார்ந்தால் என்ன?" என்று கேட்டார் கிங்கின் தந்தை.

"உன்னைப் போன்ற கறுப்பு நீக்ரோக்களுக்குப் போட்ட ஆசனம் இதுவல்ல; அது!" என்று பின் வரிசையில் போடப்பட்டிருந்த பெஞ்சைக் காட்டினார் விற்பனையாளர்.

கிங்கின் தந்தைக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்து விட்டது. 'முடியாது என்று மறுத்துச் சண்டை போடலாமா?' என்று! ஆனால் பூட்ஸ் கிடைக்கும் என்ற ஆசையோடு வந்திருக்கும் மகனின் மனத்தை முறிக்க விரும்பாமல் திரும்பிப் பார்த்தார். 'பின்னால் போய் உட்காருவோமா?' என்று வேண்டா விருப்பாகக் கேட்டார்.

"ஏன்? நாம் எதற்காகப் பின்னால் போய் உட்கார வேண்டும்?"

"அவர்கள்தோல்வெளுப்பு, நம் தோல் கறுப்பு."

"பூட்ஸ் வாங்கிக் கொள்ளுவதாயிருந்தால் இங்கே உட்கார்ந்துதான் வாங்கிக் கொள்ளுவேன். இல்லாவிட்டால் எனக்குப் பூட்ஸேவேண்டாம்!" என்று அழுத்தமாக மறுத்தார் பிள்ளைப் பிராயம் தாண்டாத கிங்.

"சபாஷ்!" பெற்ற தந்தை மகிழ்ச்சியில் கூவினார்.

ஆனால் பச்சிளம் பாலகனான கிங் வெறும் காலோடு வெளியேறும்படியாகி விட்டது.

இளம் பிராயத்தில் பச்சை மரத்தாணி போல் பதிந்த இந்த நிகழ்ச்சிகள் அவர் மனத்தை வளர்த்தன. நீக்ரோக்களின் நலனையே தம் மூச்சாகக் கொண்டார். படித்துத் தேர்ந்து டாக்டர் பட்டம் பெற்ற கிங்கை மகாத்மாகாந்தி கவர்ந்தார். அவரது அஹிம்சையும் சத்தியமும் கிங்கின் வாழ்க்கையில் பெரும் திருப்பத்தை உண்டு பண்ணின. நீக்ரோக்களின் நலனுக்காகச் சாத்துவிகப் போரை மேற்கொண்ட அவருக்கு 1964ஆம் ஆண்டு சமாதானப் பணிக்கான நோபல் பரிசு கிடைத்தது.

1956ம் ஆண்டு பாரத நாட்டுக்கு வந்திருந்த மார்ட்டின் லூதர் கிங், "மற்ற நாடுகளுக்குப் போனதெல்லாம் எனக்கு உல்லாசப் பயணமெனவே தோன்றியது. ஆனால் பாரத விஜயம் புனித தீர்த்த யாத்திரையாகத் தோன்றுகிறது!" என்று கூறியுள்ளார். மக்கட் பண்பையும் மனிதாபிமானத்தையும் வளர்ப்பதிலேயே வாழ்நாளைச் செலவிட்ட கிங் ஒரு முறை கூறினார்:

"அரும் பெரும் பணிக்காக உயிர்விடாதவன் உயிர் வாழ்ந்து பயனில்லை."

அவர் கூற்று ஏப்ரல் மாதம் நாலாந் தேதி உண்மையாகி விட்டது. — ரா. வீ.



"சந்தமிகு தமிழ் மறையோன்" என்ற பெரியாரான ஸ்ரீமந் வேதாந்த தேசிகரின் எழுநூறாவது பிறந்த நாள் விழா அடுத்த ஆண்டு வருகிறது. அப்பெரியாரைப் பற்றிய சில குறிப்புகள்.

# சந்தமிகு

ஸ்ரீ பகவத் ராமாநுஜருக்கு அடுத்தபடியாக வைஷ்ணவ வழிபாட்டை நிலைநாட்ட அவதரித்தவர் ஸ்ரீ வேதாந்த தேசிகர் என்ற ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகர். இவர் கி. பி. 1268ம் ஆண்டு, புரட்டாசி மாதம், திருவோண நக்ஷத்திர நாளில் காஞ்சீபுரத்துக் கருகில் உள்ள திருத்தண்கா என்ற இடத்தில் பிறந்தார். இவருடைய தந்தையின் பெயர் அனந்தஸூரி; தாயைத் தோதாத்ரி அம்மையென்று கூப்பிடுவார்கள்.

திருமலையில் இருக்கும் வேங்கடமுடையானின் திருமணியின் அவதாரம்தான் தேசிகரென்று கூறுவர். சிலர் இவரை இராமாநுஜரின் அவதாரமென்றும் சொல்வர்.

அக்ஷராப்பியாஸத்தையும் உபநயனத்தையும் ஸ்ரீ தேசிகருக்குச் செய்து வைத்தபின் அனந்தஸூரி அவரைக் கல்வி கற்றுவர அப்புள்ளார் என்பவரிடம் அனுப்பி வைத்தார்.

ஸ்ரீ தேசிகருக்கு ஆறு வயதிருக்கும். ஒரு நாள் காலக்ஷேபமொன்றைக் கேட்பதற்காக அவருடைய குருவுடன் சென்றார். என்ன ஆச்சரியம்! அவரைப் பார்த்தவுடனே பௌராணிகர் கதை சொல்வதை நிறுத்தி விட்டார். அதைவிட ஆச்சரியம்! தேசிகர் பௌராணிகர் விட்ட இடத்திலிருந்து தொடங்கி அந்தக் கதையை முடித்தது. இதைப் பார்த்த அங்கிருந்த மக்கள் இவர் சாதாரண புருஷரல்ல என்று கூறி வியந்தனர்.

இருபதாவது ஆண்டை எய்துமுன் ஸ்ரீ தேசிகர் வடமொழியிலும் தென்மொழியிலும் பாண்டித்தியம் அடைந்து அவருக்கு முன்பிருந்த ஆசாரியர்கள் எழுதிய நூல்கள் அனைத்தையும் கற்று மிகவும் புலமையுடன் விளங்கினார்.

சில ஆண்டுகளுக்குப் பின் தேசிகர் க்ஷேத்ராடனம் செய்யப் புறப்பட்டுத் திருவஹீந்திரபுரமென்ற ஊருக்கருகில் இருக்கும் ஔஷத மலையில் தங்கினார். அங்கு கருட மந்திரத்தைத் தியானித்தார். ஸ்ரீ கருடாழ்வார் அவர் முன் தோன்றி அவருக்கு ஹயக்ரீவ மந்திரத்தை உபதேசித்துவிட்டு ஒரு ஹயக்ரீவரின் விக்கிரகத்தையும் அளித்தாராம். இந்த விக்கிரகம் திருவஹீந்திரபுரத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டு இன்றும் ஹயக்ரீவர் கோயிலாக விளங்குகிறது.

திருவஹீந்திரபுரத்தை விட்டு ஸ்ரீ தேசிகர் புறப்பட யத்தனிக்கையில் அவ்வூரில் கோயில் கொண்டுள்ள பெருமான் தெய்வநாயகன் அவரது கனவில் தோன்றித் தம்மைப் பற்றிப் பாடும்படி உத்தரவிட்டாராம். பெருமாளின்

# தமிழ் மறையோன்

## எம். என். சுந்தரராகவன்

உத்தரவுக்கிணங்கப் பாடியதுதான் ''தேவ நாயக பஞ்சாசத்'' என்ற ஸ்தோத்ரம். பிறகு ஸ்ரீ தேசிகர் காஞ்சிக்குத் திரும்பினர்.

திருவரங்கத்தில் ஜைனர்கள் போன்ற மற்ற மதத்தினர் செய்யும் கொடுமைகளைச் சகிக்க முடியாத சில பக்தர்கள் தேசிகரை அண்டி அவரைத் திருவரங்கத்துக்கு அழைத்தனர்.

திருவரங்கத்துக்குச் சென்ற ஸ்ரீ தேசிகரை ஒருவன் வாதம் செய்ய அழைத்தான். அவனுடன் வாதித்து வென்றவுடன் அவன் தனக்கு ஸ்ரீ தேசிகருக்கு அடுத்தபடியாகத் தீர்த்தம் வாங்கிக் கொள்ள உரிமையளிக்க வேண்டும் என்று கோரினன். அவனுடைய புத்தியை அறிந்த அவர், ''அவ்வாறே ஆகட்டும்'' என்று சொல்லிவிட்டுக் கோவிலில் தீர்த்தம் பெறுபவர்கள் வரிசையில் கடைசியாக நின்ருர்! என்ன செய்வது! வாதித்தவன் அவருக்கு அடுத்தபடியாக, அதாவது எல்லோருக்கும் கடைசியில் நின்று தீர்த்தத்தை வாங்கிக் கொண்டு அவமானமுற்ருன்!

பொருளை எப்போதுமே விரும்பாத அவர் ''வைராக்கிய பஞ்சகம்'' என்ற நூலை இயற்றினர்.

திருவரங்கத்தில் ஸ்ரீரங்கநாச்சியாரால், ''ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ர'' என்ற விருதைப் பெற்ற ஸ்ரீ தேசிகர் காஞ்சிக்குத் திரும்பியவுடன் அங்கிருக்கும் சில பொருமைக்காரர்களின் தொல்லைகளுக்கு ஆளானுர்.

அந்தப் பொருமைக்காரர்கள் ஸ்ரீ தேசிகர் அவருடைய தந்தைக்குச் செய்ய வேண்டிய சிராத்தத்துக்கு ஒருவரையும் போகவிடாமல் தடுத்தார்கள். ஆனல் ஸ்ரீ ஹயக்ரீவன் மூன்று வடிவங்களில் தேசிகருடைய இல்லத்துக்கு வந்து சிராத்தத்தை நடத்திக் கொடுத்தாராம்!

மற்றும் சில அசூயைக்காரர்கள் ஒரு பிரம்மச்சாரியைத் தேசிகரிடம் அனுப்பி அவன் கல்யாணம் செய்து கொள்வதற்காகப் பொருளைக் கேட்கச் சொன்னர்களாம். பிரம்மச்சாரியின் வேண்டுகோளை நிராகரிக்க முடியாமல் ''ஸ்ரீ ஸ்துதி''யைப் பாடப் பொற்காசுகள் மழையாகப் பொழிந்தனவாம்.

இவருக்குத் தமிழில் மிகவும் பற்று உண்டு. தம்மை, ''சந்தமிகு தமிழ் மறையோன்'' என்று அவர் இயற்றிய பிரபந்த ஸாரத்தில் கூறுகிருர். வடமொழியில் இருக்கும் வேத நூல்களுக்கு இணையாகத் தமிழிலே நூல்களை இயற்ற வேண்டும் என்று விரும்பினர். இவர் தமிழில் எழுதிய ''தேசிக ப்ரபந்தம்'' என்ற நூல் கலைசிறந்தது.

ஸ்ரீதேசிகர் பிரபந்தங்கள், வேதாந்த க்ரந்தங்கள், வியாக்கியானங்கள், ரகசியங்கள் முதலியவற்றையும் நான்கு காவியங்களையும் ஒரு நாடகத்தையும் இயற்றியுள்ளார்.

யாதவாப்யுதயம் என்ற நூலுக்கு வியாக்கியானம் எழுதும்போது அப்பய்ய தீக்ஷிதர் என்ற சைவப் பெரியார் ஸ்ரீ தேசிகரைப் போற்றியிருக்கிருர்.



நூறுண்டுகளுக்கு மேல் பெருமையுடன் வாழ்ந்து பக்தியைப் பரப்பிய ஸ்ரீ தேசிகரின் எழுநூருவது பிறந்ததின விழா அடுத்த ஆண்டு வருகிறது.



---

பணமும் சந்தோஷமும் ஜன்ம விரோதிகள். ஒன்று தங்குமிடத்தில் மற்றென்று வருவதில்லை.

— பிலிப்பைன் பழமொழி.

அனுப்பியவர் : **காழி ஜெயா**



---

# துருவங்கள் சேர்ந்தால்...?

## திரு காமராஜ் குஸ்திப் பந்தயத்துக்குத் தலைமை வகித்தால்......?

இப்போ நடந்த குஸ்திப் பந்தயத்துக்குத் தலைமை வகிச்சு வெற்றிபெற்றவங்களுக்குக் கோப்பைகளைக் கொடுக்கிற பொறுப்பை ஏற்றுக்கிட்டிருக்கேன். இந்தக் குஸ்தியைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லியாகணுமில்லே ?

தாராசிங் அவர்களும் கிங்காங்கும் நல்லாத்தான் சண்டை போட்டாங்க. ஆனால் இதிலே ஒவ்வொருத்தரும் ஒரு ரகம்ங்கிறதை நாம் மறந்துடக் கூடாதுல்ல. ஒருத்தரை ஒருத்தர் ஜெயிச்சுப் போடணுங்கிறதுக்காக இரண்டு பேரும் வெவ்வேறு வழி முறைகளைக் கையாண்டாங்க. அவங்க தப்பாட்டத்தையும் நாம கவனிச்சுக்கிட்டுத் தானே இருந்தோம்? புரிஞ்சுக்கிடாமயா இருந்தோம்னு கேட்கிறேன் ?

காங்கிரஸ் அரசாங்கம் செய்து வந்த நல்ல வேலைகளையோ அல்லது வேறு யார் செய்த நல்ல வேலைகளையோ மக்களுடைய மனசிலே திரித்துச் சொன்னாலும்கூட மக்கள் உண்மையைப் புரிந்து கொள்ளாமல் இல்லே. நன்றாகப் புரிஞ்சுக்கிட்டு இருக்காங்க. சுலபமாக மக்களை யாரும் ஏமாற்றிவிட முடியாது. தப்புப் பிரசாரங்களை மாத்திரம் எடுத்து வைச்சுக்கிட்டுக் கணக்குப் போட்டால் நாட்டிலே ஒரு விதமான வேலையும் நடக்காமல் தொந்தரவும் சண்டையும்தானே இருந்து கொண்டிருக்க முடியும்? ஆனால் அப்படியா இருக்குதுன்னு கேட்கிறேன். குஸ்தி பயில்வான்கள்தானே சண்டை போட்டாங்க !

நண்டுப் பிடின்னு பக்கத்திலே இருந்தவங்க சொன்னாங்க. எனக்குத் தெரியாது. கிங்காங் போட்டாரு. தாராசிங் அந்தப் பிடியிலேயிருந்து சாமர்த்தியமா நழுவி வந்து விட்டாரு. இது போலேதான் ஏழைமைப் பிடியிலிருந்து நம்மை நாமே மீட்டுக் கொண்டாக வேணும். ஏன்னு கேட்டா நம்ப நாடு இன்னும் வறுமையிலே ஆழ்ந்திருக்கு; நாம்தான் இந்த வறுமைப் பேயை ஓட்டியாகணும்.

தாராசிங் வடக்கத்திக்காரர்தான். அதுக்காக நாம அவரோட திறமையையும் கலையையும் மதிக்காமயா விட்டுடறோம்? வடக்கு தெற்கு என்பதெல்லாம் இன்னிக்கு நேத்தைக்கு ஏற்பட்டதா என்ன? எத்தனையோ காலமாக ஏதேதோ காரணங்களுக்காகப் பேசப்படுது. ஒரு ஊர்க்காரருக்கு இன்னொரு ஊர்க்காரர் பேரிலே கோபம் என்றால் இரண்டு ஊரார்களுக்குமாகச் சண்டை. இன்னொரு ஊரிலே கிணற்றிலே தண்ணி எடுப்பது சம்பந்தமாகச் சண்டை இருக்கும். இப்படி எங்கேயாவது சண்டை இல்லாமே இருக்குதா என்ன? ஆனால் இவ்வளவுக்கு மிடையிலே பெரும்பாலான மக்கள் ஒற்றுமையாகத்தானே வாழ்ந்துக்கிட்டு இருக்காங்க! நீங்க எல்லாரும் ஒன்றாக இங்கே கூடியிருப்பதே ஒற்றுமைதானேங்கிறேன்!

இந்தக் குஸ்திப் பந்தயத்துக்குச் சில விதி முறைகள் இருக்கின்றன. அதன்படிதான் இதிலே கலந்துகிறவங்க நடந்துக்கணும். ஆனால் கிங்காங் அடிக்கடி இந்தச் சட்ட திட்டங்களை மறந்தவர் போல் நடந்துக்கிட்டாரு. நாலாவது ரவுண்டிலே தாராசிங் கண்களைக் குத்திப் போட முயற்சி பண்ணினாரு. கிரீக்கோ ரோமன் ஸ்டைல்ங்கிற ரகத்திலே நடக்கிற இந்தக் குஸ்தியிலே கண்ணிலே மூக்கிலே விரலை விடறது சட்டத்துக்குப் புறம்பானதில்லே ?

மக்களாலே தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சி நடக்கிற இந்த நேரத்திலே, அமைதியைக் குலைத்துத்தான் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற மனப்பான்மை சிலர் கிட்டேயிருக்கிற மாதிரியில்லே கிங்காங் நடந்துக்கிட்டாரு. அப்படி நடக்கிறது தப்பு. அவருக்குன்னு ஒரு வழி இருக்கலாம். ஆனால் அந்த வழி சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு இருக்க வேண்டாமாங்கிறேன்! அடாவடியாப் போகக் கூடாதுல்லே ?

▶ அரசியலிலேயே பார்க்கலாமே! எந்தக் கட்சியானு



ணும் மக்கள் வாழ வேண்டும் என்றுதான் சொல்லுது. ஒவ்வொரு குஸ்தி பயில்வானும் போட்டியிலே தான் ஜெயிக்கணும்னு ஆசைப்படற மாதிரின்னு வச்சுக்குவோமே! ஆனால் எப்படி மக்களை வாழ்விப்பது? எந்த வழி வகுத்து இதை நடத்துவது என்பதிலே கருத்து வேறுபாடும் மாறுபாடும் இருக்கலாம். இதுகூட இல்லேன்னு தனித் தனிக் கட்சி வைத்திருப்பதிலே அர்த்தமே இல்லாமப் போயிடுமேங்கிறேன்.



ஒரு பந்தயம், போட்டின்னு வெற்றி தோல்விங்கிறது உறுதியான விஷயம். ஒருத்தர் ஜெயித்தாக்க ஒருத்தர் தோற்கணும். யாருகிட்டே திறமையிருக்கோ அவங்க இன்னிக்கு ஜெயிப்பாங்க! நாளைக்கே அவங்க திறமை குறைஞ்சு போனா தோற்றுப் போவாங்க!.... ஜனநாயக தத்துவம்தான்கிறேன்! இன்னிக்குக் கிங்காங் தோத்துப் போனாரு. திறமைக் குறைவுங்கிறதைவிட ஜெயிக்கணுமேங்கற பதற்றம்தான் காரணம்!

அரசியலே எடுத்துக்கிடுவோமே! சில சமயம் கட்சிக்குள்ளேயே கருத்து வேறுபாடு இருக்கலாம். ஒருத்தருக்கு ஆதரவு அதிகம் இல்லாமல் ஆட்சி பீடத்தில் அமர முடியாமல் போகலாம். இடையில் புகுந்து மத்தியஸ்தம் பண்ணுவது ஜனநாயகத்திலே சாதாரண சம்பவமாகும். ஆனால் ஆனும் சந்தர்ப்பம் ஏற்படவில்லையே என்பதால், சலிப்பும் சஞ்சலமும் ஏற்பட்டு இதுவே பெரிதாகித் தங்களுக்குள்ளேயே கண்மூடித்தனமாகக் குறை கூறுவதும் சண்டை போடுவதும் எந்தக் கட்சிக்கும் நல்லது இல்லேயில்லே! தாரா சிங் கை அகஸ்மாத்தாகத் தன் தாடியில் பட்டுவிட்டதற்குக் கிங்காங் பெரிய கலாட்டாவே பண்ணி, மத்தியஸ்தரையே தூக்கி வெளியில் எறிந்து விட்டாரே!

யாரையும் தனிப்பட்ட முறையில், புகழுக்குத் தூக்கிவிட முடியாது. பொது மக்கள்கிட்டேதான் அந்தச் சக்தி இருக்கு. அது அவங்ககிட்டே யிருந்துதான் வர வேண்டும். அந்தப் புகழை இன்றைக்குத் தாராசிங் உங்ககிட்டேயிருந்து பெற்றுக் கிட்டாரு. அதற்கு அடையாளமாக இப்போ உங்க சார்பிலே அவருக்கு இந்தக் கோப்பையைக் கொடுக்கிறேன். அறிவு உலகத்திலே அடிக்கடி மோதல் ஏற்பட்டுக்கிட்டே இருக்கும். அது ஒரு மாதிரி மோதல். ஆனால் இங்கு குஸ்தி உலகத்திலே ஏற்படற மோதல் பொதுமக்களுக்கு உற்சாகம் ஊட்டற மோதல். இது நமக்குத் தேவைதான்னேன்!

**— கோமதி சுவாமிநாதன்**

அடுத்த இதழில் :

**திரு நாகேஷ் வானொலியில் பிராந்தியச் செய்திகள் வாசிக்கிறார்!**



"இனிமேல் சமூக சேவையில் தீவிரமாக ஈடுபட முடிவு செய்துட்டேன்!"

"ஏன், என்ன அப்படி...?"

"முன்பு மாமியாரோடு மாத்திரம் சண்டை. இப்போ நாத்தனார், மைத்துனர், வேலைக்காரன், தோட்டக்காரன், எங்கப்பா, எங்கம்மா, என் கணவர் எல்லோரோடும் சண்டை!"



"திறப்பு விழாவை நடத்திக் கொடுத்ததற்குத்தான் ரிப்பன் வெட்டின வெள்ளிக் கத்திரிக் கோலேயே உனக்குப் பரிசாகக் கொடுத்து விட்டார்களே, அப்புறமும் ஏன் முணுமுணுக்கிறாய்?"

"கத்திரிக்கோல்தானே கொடுத்தார்கள், ரிப்பன் கொடுக்கவில்லையே!"

# மகாபாரதம் ராஜாஜி



கதை எழுதும்போதே மனம் திடுக்கிடுகிறது. மகா பாபமான செயலில் ராக்ஷஸத் துணிச்சலுடன் திருதராஷ்டிர குமாரர்கள் இறங்கிவிட்டார்கள்.

சபையைச் சேர்ந்ததும் திரௌபதி தன் கோபத்தை அடக்கிக் கொண்டு கூடியிருந்த விருத்தர்களைப் பார்த்து, கம்பீரமாகப் பேச ஆரம்பித்தாள்: "சூதில் கைதேர்ந்தவர்களும் அயோக்கியர்களும் ஒன்று சேர்ந்து மோசமாகச் சூழ்ச்சி செய்து அரசனை ஏமாற்றி என்னைப் பந்தயமாக வைக்கச் செய்ததை எவ்வாறு நீங்கள் ஒப்புக் கொண்டீர்கள்? சுதந்திரம் இழந்த ஒருவன் எப்படித் தன் மனைவியைப் பந்தயம் வைத்து இழக்க முடியும்? மனைவிகள், பெண்கள், மருமகளிர் படைத்த கௌரவ குலத்தோர் பலர் சபையில் இருக்கிறீர்கள். என் கேள்விக்குச் சமாதானம் சொல்லுங்கள்" என்றாள்.

இவ்வாறு பாஞ்சாலி ஓர் அநாதைப் பெண் போல் சங்கடப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கப் பீமனுக்குப் பொறுக்க முடியவில்லை. "யுதிஷ்டிரரே! சூதாட்டமே தொழிலாக வைத்திருக்கும் நீசரும் தங்களோடு வாழும் தாசிகளைக் கூடப் பந்தயம் வைக்க மாட்டார்கள். துருபத புத்திரியை இந்த அற்பர்கள் துன்பப் படுத்த நீர் விட்டீர். இந்த அக்கிரமத்தை நான் பொறுக்க முடியாது.

இந்த மகா பாவத்துக்கு நீர் காரணமாவீர். ஹே! தம்பி சகாதேவா! நெருப்பு எடுத்து வா. எந்தக் கைகளைக் கொண்டு இந்தச் சூதாட்டம் இவர் ஆடினாரோ, அந்தக் கைகளை நான் நெருப்பு வைத்துக் கொளுத்தப் போகிறேன்'' என்று கர்ஜித்தான்.

அருச்சுனன் பீமனைத் தடுத்தான். ''அப்பனே! இதற்கு முன் எப்போதும் நீ இவ்வாறு பேசினது கிடையாது. நம்முடைய சத்துருக்களால் செய்யப்பட்ட இந்தச் சூழ்ச்சி நம்மைக்கூடப் பாபம் செய்யத் தூண்டுகிறது. நாம் அந்த வலையில் விழக் கூடாது. பகைவர்களின் எண்ணம் நிறைவேறிப் போகும், ஜாக்கிரதை!'' என்று மெதுவாகச் சொன்னான். பீமன் கோபத்தை அடக்கிக் கொண்டான்.

பாஞ்சாலியின் பரிதாபத்தைப் பார்த்து அதைச் சகிக்க முடியாதவனாகத் திருதராஷ்டிர புத்திரன் விகர்ணன் என்பவன் எழுந்தான். ''க்ஷத்திரிய வீரர்களே! நீங்கள் என்ன காரணத்தினால் பேசாமல் இருக்கிறீர்கள்? நான் சிறியவன். நீங்கள் மௌனம் சாதிப்பதால் என் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள். மோசமாக அழைக்கப்பட்டுச் சூதாட்டத்தில் சிக்கிவிட்ட யுதிஷ்டிரன் இவளைப் பந்தயம் வைத்தான். அது செல்லாது. தவிர, இவள் யுதிஷ்டிரன் ஒருவனுக்கு மட்டும் சொந்தமல்ல. அதனாலும் பந்தயம் செல்லாது. மேலும் அவன் தன் சுதந்திரத்தை இழந்து விட்டான். தன்னைத் தான் தோற்ற பின் இவளை வைத்து ஆட அவனுக்கு உரிமை ஏது? மற்றும் ஓர் ஆட்சேபணை உண்டு. சகுனியே முதலில் இவள் பெயரைச் சொன்னான். இது க்ஷத்திரியர்கள் ஆடும் முறைக்கு முரண்பட்டது. குறிப்பிட்ட பொருளைப் பந்தயம் வைக்கச் சொல்லி எதிராளி சொல்லக் கூடாது. இவற்றையெல்லாம் யோசித்தால் பாஞ்சாலி நியாயமாக ஜெயிக்கப்படவில்லை. இது என் அபிப்பிராயம்'' என்று சொன்னான்.

இவ்வாறு சிறுவனாகிய விகர்ணன் தைரியமாகப் பேசினதும் சபையோருக்குக் கடவுள் கொடுத்த அறிவு திடீரென்று சிறையினின்று விடுபட்டது. பெரிய ஆரவாரம் கிளம்பிற்று. அனைவரும் ஒரே முகமாய் விகர்ணனைப் புகழ்ந்தார்கள். ''தருமம் பிழைத்தது'' என்றார்கள்.

அந்தச் சமயத்தில் கர்ணன் எழுந்து, ''விகர்ணா! சபையில் பெரியவர்கள் இருக்கச் சிறு பையனான நீ எழுந்து யுக்தி வாதம் செய்கிறாய். நெருப்பைக் கடைந்த அரணிக் கட்டையை அந்த நெருப்பே பற்றி அழிப்பது போல் நீ அறியாமையால் அவசரப்பட்டு, பிறந்த வீட்டுக்கே துரோகம் செய்கிறாய். தனக்குள்ள எல்லாப் பொருளையும் யுதிஷ்டிரன் முதலிலேயே பந்தயம் வைத்து இழந்தான். ஆகையால் அவளை முந்தியே சகுனிக்கு இழந்து விட்டான். இதைப் பற்றி வேறு என்ன கேள்வி? பொருட்களையெல்லாம் இழந்த பின் இவர்கள் மேல் உள்ள வஸ்திரங்களும் இப்போது சகுனியுடையதே. பாண்டவர்களுடைய வஸ்திரங்களையும் அவர்களுடைய மனைவியான இவளுடைய துணியையும் பறித்து உடனே சகுனிக்குத் தருவாய், துச்சாதனா!'' என்றான்.

பாண்டவர்கள், கர்ணன் சொன்ன குரூரப் பேச்சைக் கேட்டதும் தருமத்தின் பரீட்சை கடைசிவரையில் நடைபெற வேண்டியது போலிருக்கிறது. எதற்கும் தயார் என்று பேச்சின்றி உடனே தங்கள் அங்க வஸ்திரங்களை எடுத்துச் சபையில் வீசி எறிந்தார்கள்.

இதைக் கண்ட துச்சாதனன் திரௌபதியிடம் சென்று அவள் ஆடையைப்



பிடித்திழுக்க ஆரம்பித்தான். இனிமேல் பகவான் ஒருவனே துணை என்று பாஞ்சாலி, "லோகநாதா! ஈசனே! இந்த நிலையை அடைந்த என்னை நீயும் கைவிட்டு விடாதே! உன்னைச் சரணம் அடைகிறேன். காப்பாற்று!" என்று அச்சுதன் பேரைச் சொல்லிப் பெரும் கூச்சல் போட்டு மூர்ச்சையானாள்.

அப்போது ஒரு பெரிய ஆச்சரியம் நடந்தது. துச்சாதனன் இழுக்க, இழுக்கத் திரௌபதியின் வஸ்திரங்கள் புதிது புதிதாக உண்டாகிக் கொண்டு வந்தன. பெருங் குவியலாகத் திவ்விய ஆடைகள் சபையில் குவிந்தன.

துச்சாதனன் களைத்துப் போய்த் தரையில் உட்கார்ந்தான். இந்த ஆச்சரிய நிகழ்ச்சியைக் கண்டு சபை பயந்து நடுங்கிற்று.

கோபத்தினால் உதடுகள் துடிக்கப் பீமன் எழுந்து பேரொலியுடன் பயங்கரமான ஒரு பிரதிக்ஞை செய்தான்.

"பாரத வம்சத்துக்குத் தகாத இந்தப் பாவி துச்சாதனனுடைய மார்பைக் கிழித்து இவன் ரத்தத்தை நான் உறிஞ்சிக் குடித்து விட்டுத்தான் என் முன்னோர்கள் இருக்கும் உலகத்துக்குப் போவேன்! இது சத்தியம்" என்று பீமசேனன் கோர சபதம் செய்தான்.

திடீரென்று நரிகள் ஊளையிட்டன. நாலு பக்கங்களிலிருந்தும் கழுதைகளும், பிணம் தின்னும் பறவைகளும் விகாரமாகக் கத்தின.

ஃ ஃ ஃ

நடந்த சம்பவம் குல நாசத்துக்குக் காரணமாகும். தீராத துவேஷம் உண்டாகி விட்டது. தன் புத்திரர்களுக்குப் பெரிய அபாயம் நேர்ந்து விட்டது என்பதை அறிந்து கொண்ட திருதராஷ்டிரன், திரௌபதியை அழைத்து, "பாஞ்சாலி, என் பிரிய மருமகளே! உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று சொல்லி, தன் புத்திரர்கள் மேல் கோபமும் வெறுப்பும் கொண்ட திரௌபதியைச் சமாதானப் படுத்தப் பார்த்தான். யுதிஷ்டிரனைக் கூப்பிட்டு, "அஜாத சத்ருவே! நீ க்ஷேமமாக இருப்பாய். துரியோதனன் செய்த தீமையை மனத்தில் வைக்க வேண்டாம். உன் தாயாரான காந்தாரியையும், கண்ணில்லாத என்னையும் மதித்து மற்றவர்கள் செய்த குற்றங்களைப் பொறுப்பாய். நாடு, நகரம், பொருள் எல்லாவற்றையும் மறுபடியும் பெற்றுச் சுதந்திரமாக இருங்கள். இந்திரப் பிரஸ்தம் போங்கள்" என்றான்.

இவ்வாறு திருதராஷ்டிரனின் வரம் பெற்றாலும் யுதிஷ்டிரனுக்கும் சகோதரர்களுக்கும் மனத்தில் சமாதானம் உண்டாகவில்லை. ஆட்டத்தில் இழந்ததைத் திரும்பப் பெறுவதில் ஏதோ குற்றம் இருப்பதாகவே எண்ணினார்கள். கஷ்டங்களும் அனர்த்தங்களும் நெருங்கும் சமயத்தில் புத்தி தடுமாறுவது இயல்பு. பூபாரம் தொலைவதற்காகக் கலியினால் பிரவேசிக்கப் பட்டவனைச் சபையோர் எல்லோரும் தடுத்தும், தரும புத்திரன் மறுபடியும் சகுனியுடன் ஆட்டத்துக்கு உட்கார்ந்தான். தோற்றவன் தன் சகோதரர்களுடன் பன்னிரண்டு வருஷ வனவாசம் செய்து பதின்மூன்றும் வருஷம் உறவினரால் அறியப்படாமல் அஞ்ஞாத வாசம் செய்வது என்கிற நிபந்தனைப்படி மறுபடியும் பாய்ச்சிகை உருட்டி யுதிஷ்டிரன் தோல்வியடைந்தான்.

உடனே பாண்டவர்கள் வனவாச தீட்சை எடுத்துக் கொண்டு சபையோரிடம் விடைபெற்றுக் கொண்டு காடு சென்றார்கள். சபையிலிருந்த அனைவரும் வெட்கத்தினால் தலை குனிந்தார்கள்.

## 27. திருதராஷ்டிரன் கவலை.

பாண்டவர்கள் வனம் செல்லப் புறப்பட்டார்கள். நகர வீதிகளில் ஜனக் கூட்டத்தின் நெருக்கடி நடக்க இடமில்லாமல் இருந்தது. மாளிகைகளிலும், தேவாலயங்களிலும் கோபுரங்கள் மேலும், மரங்கள் மேலும் ஜனங்கள் ஏறி உட்கார்ந்து பார்த்தார்கள். ஸ்திரீகள் உப்பரிகைகளிலும், பலகணிகள் வழியாகவும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். குடையுடனும் வாத்தியத்துடனும் பவனி செல்ல வேண்டிய தரும புத்திரன் மரவுரியும் தோலும உடுத்துக் கால் நடையாக வனம் செல்கின்றதைப் பார்த்து, ஜனங்கள் எல்லோரும் 'ஆ! ஆ!' "சீ! சீ!" என்று சொல்லிக் கண்ணீர் சொரிந்தார்கள்.

திருதராஷ்டிரன் விதுரனுக்குச் சொல்லி அனுப்பினான். "விதுரா! பாண்டு புத்திரர்களும் திரௌபதியும் எப்படிச் செல்கின்றனர்? கண்ணால் பார்த்துத் தெரிந்து கொள்ள இயலாதவனுக்கு நீ சொல்ல வேண்டும்" என்று கேட்டான்.

"குந்தி புத்திரனான யுதிஷ்டிரன் துணியினால் முகத்தை மூடிக் கொண்டு போகிறான். பீமன் தன் கைகளிரண்

டையும் பார்த்துக் கொண்டு போகிருன். அருச்சுனன் மணலை எடுத்துத் தூவிக் கொண்டு போகிருன். நகுல சகாதேவர்கள் உடலெல்லாம் புழுதி பூசிக் கொண்டு தருமபுத்திரன் பின் போகின்றனர். திரௌபதியும் விரித்த கூந்தலினுல் முகம் முழுதும் மூடியவளாகக் கண்ணீர் சொரிந்து கொண்டு தருமபுத்திரன் பின் செல்கிருள். புரோகிதர் தௌம்மியர் யமனைப்பற்றிய ஸாமகீதங்களை ஸ்வரத்துடன் பாடிக் கொண்டு கூடச் செல்கிருர்'' என்ருன் விதுரன்.

இதைக் கேட்ட திருதராஷ்டிரனுக்கு முன்னைவிட அதிகமான பயமும் கவலையும் உண்டாயின. ''நகரத்திலுள்ள ஜனங்கள் என்ன சொல்லுகிருர்கள்?'' என்று மறுபடியும் கேட்டான்.

''மகாராஜாவே! எல்லா வருணத்தாரும் நம்மை இகழ்ந்து சொல்லும் சொற்களைச் சொல்லுகிறேன். கேளும்! 'நம்முடைய நாயகர்கள் ஊரை விட்டுப் போகின்றனரே! கௌரவ வம்சத்துப் பெரியோர்களெல்லாம் அறிவடையாத பாலர்களைப் போல் நடந்து கொண்டார்களே! சீ! சீ! இதுவென்ன துராசை? பாண்டு புத்திரர்களைத் திருதராஷ்டிரன் காட்டுக்கு அனுப்பினுன் என்று நகரத்து ஜனங்கள் எல்லோரும் நம்மை ஏசுகிருர்கள். ஆகாயத்தில் மேகமில்லாமலே மின்னல்கள் உண்டாயின. பூமியும் நடுங்கிற்று. இதைப் போன்ற வேறு கெட்ட உற்பாதங்களும் தோன்றின'' என்ருன்.

இவ்வாறு திருதராஷ்டிரனும் விதுரனும் பேசிக் கொண்டிருந்த பொழுது நாரதர் திடீரென்று பிரசன்னமானுர். ''இன்றைக்குப் பதினுன்காவது வருஷத்தில் துரியோதனன் செய்த பிழையினுல் கௌரவர்கள் அழியப் போகின்றனர்'' என்று திருதராஷ்டிரனுக்குச் சொல்லிவிட்டுத் தேவரிஷி மறைந்தார்.

துரியோதனனும் அவன் சகாக்களும் பயமடைந்து துரோணரிடம் சென்ருர்கள்.

''ஆசாரியரே! ராஜ்யமெல்லாம் உமது! நீரே தஞ்சம். எங்களைக் கைவிடலாகாது'' என்று அவரைக் கெஞ்சினுர்கள்.

இதைக் கேட்ட துரோணர், ''பாண்டவர்கள் தேவர்களின் அம்சம். அவர்களை யாரும் வெல்ல முடியாது. இது அறிவுடையோரின் அபிப்பிராயம். இதை நான் அறிந்திருந்தாலும் என்னைச் சரணடைந்த உங்களை நான் விட்டு விட முடியாது. உங்களுக்கு என்னுல் கூடிய அளவு முழு மனத்தோடும் அன்போடும் உதவி செய்வேன். ஆயினும், விதியானது மிக்க வலிமையுடையது. பாண்டவர்கள் வனவாசம் முடிந்து கோபத்தோடு திரும்பி வருவார்கள். துருபதன் மேல் எனக்கு உண்டான கோபத்துக்காக நான் அவனை ராஜ்யத்திலிருந்து தள்ளி அவமானப்படுத்தினேன். என்னைக் கொல்வதற்காகவே ஒரு புத்திரனை வேண்டி யாகம் செய்து துருபதன் திருஷ்டத்யும்னனைப் பெற்றிருக்கிருன். அவன் பாண்டவர்களுக்கு நெருங்கிய பந்துவும், சிநேகிதனும் ஆகிவிட்டான். என்னைக் கொல்லுவதற்காகவே அவனுக்கும் பாண்டவர்களுக்கும் சிநேகமும் சம்பந்தமும் விதிவசமாக ஏற்பட்டிருப்பதாக உலகத்தார் எல்லோரும் பேசி வருகிருர்கள். நீங்கள் செய்து வந்த காரியங்களெல்லாம் அந்தப் பேச்சை உண்மையாக்குவதாகத்தான் இருக்கிறது. உங்களுடைய நாள் கிட்டி வருகிறது. காலதாமதம் செய்யாமல் உங்களுடைய நன்மையைச் செய்து கொள்ளுங்கள். பெரிய யாகங்களைச் செய்யுங்கள். சுகங்களை அனுபவித்து விடுங்கள். தானங்களைக் கொடுங்கள். பதினுன்காவது வருஷத்தில் ஆபத்து வரப் போகிறது. துரியோதனு! தருமபுத்திரனோடு சமாதானம் செய்து கொள். நான் சொல்வதைச் சொன்னேன். பிறகு உன் இஷ்டம்'' என்ருர்.

துரோணருடைய உபதேசம் துரியோதனனுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

ஃ ஃ ஃ

''பூபதியே! ஏன் துயரப்படுகிறீர்?'' என்று ஒரு நாள் திருதராஷ்டிரனைச் சஞ்சயன் கேட்டான்.

''பாண்டவர்களைப் பகை செய்து கொண்ட பிறகு துயரமின்மை ஏது?'' என்ருன் கண்ணில்லாத அரசன்.

சஞ்சயன், ''நீர் சொல்வது உண்மையே. கெட்டுப் போக வேண்டியவனுடைய மதி அழிந்து போகிறது. நல்லவையெல்லாம் தீயவை போலும், தீயவை எல்லாம் நல்லவை போலும் அவனுக்குத் தோன்றும். காலமானது, தானே நேராக ஒரு தடியை எடுத்து மனிதன் தலையை உடைப்பதில்லை. காரியா காரியங்களை மாருக அவனையே செய்யச் செய்து மனிதனைப் பள்ளத்தில் தள்ளுகிறது. உம்முடைய பிள்ளைகள் பாஞ்சாலியை அவமானப் படுத்தினுர்கள். தங்கள் நாசத்தைத் தாங்களே தேடிக் கொண்டார்கள்'' என்ருன். (தொடரும்)



அனுபவம்
புதுமை

# ஆலைகள், வேலைகள், உணவுச்சாலைகள்

கி.ராஜேந்திரன்

வியட்நாம் யுத்தத்தில் இதுவரை மாண்ட அமெரிக்கச் சிப்பாய்களின் எண்ணிக்கையை விட ஆண்டொன்றுக்கு அமெரிக்கச் சாலைகளில் மாளும் மக்களின் எண்ணிக்கை அதிகம் என்று நீங்களும் நானும் சொன்னால் சாதாரண அமெரிக்கர் நம்ப மறுத்தாலும் மறுப்பார் ; ஆனால் கம்ப்யூட்டர் சொல்லிறது என்றால் போதும், உடனே நம்பி விடுவார் !

அமெரிக்காவில் இது கம்ப்யூட்டர் யுகம்! ஸான்பிரான்ஸிஸ்கோ, பான் அமெரிக்கன் ஆபீஸில் அலுவல் புரியும் ஒரு பெண்மணியிடம் எனது டிக்கெட்டில் ஒரு மாறுதலைச் செய்து தரச் சொன்னேன். அதாவது பாங்காக்கிலிருந்து நேரே சிங்கப்பூர் போவதற்குப் பதில் முதலில் கோலாலம்பூர் போய்ப் பிறகு சிங்கப்பூர் செல்ல வசதியாக டிக்கெட்டை மாற்றித் தரச் சொன்னேன்.

''அப்படிச் செய்ய முடியுமா என்று கேட்டுச் சொல்கிறேன்'' என்றாள்.

''இதற்கு யாரைக் கேட்க வேண்டும்?''

''கம்ப்யூட்டரைக் கேட்கிறேன்'' என்றாள்.

''இதற்குக் கம்ப்யூட்டர் எதற்கு ? விமானம் பாங்காக்கிலிருந்து சிங்கப்பூர் பறக்கையில் வழியில்தானே கோலாலம்பூர் உள்ளது? ஆகவே, அதிகப்படி பணம் ஏதும் தராமலே நான் இடையில் கோலாலம்பூரில் இறங்கிப் பிறகு பயணத்தைத் தொடரலாம்தானே ?'' என்றேன்.

''நீங்கள் சொல்வது சரிதான். இருந்தாலும் சந்தேகத்துக்குக் கம்ப்யூட்டரையும் கேட்டு விடலாமே?'' என்றாள் அவள்.

**படங்கள் - இந்தப் பக்கத்தில் :**

**தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பண்டங்கள் விமானம் மூலம் நாட்டின் பல பாகங்களுக்கும் விரைகின்றன ; நகரில் போக்குவரத்து வசதி.**

**எதிர்ப் பக்கம்:**

**பெல் டெலிபோன் நிறுவனம் ஈடுபடும் பலவித ஆராய்ச்சிகளுள் ஒன்று: ஐ. பி. எம். கம்ப்யூட்டர்; விமானப் பயணம் என்பது அமெரிக்காவில் சர்வ சாதாரணம்.**



பகுத்தறிவு கொண்டு எளிதில் நிர்மாணிக்கக்கூடிய விஷயத்துக்கும் கம்ப்யூட்டர்தான்; ரொம்பச் சிக்கலான விஞ்ஞானப் புதிரை விடுவிக்கவும் கம்ப்யூட்டர்தான்! பொறி இயல் நிபுணர்களும், வர்த்தகர்களும், விஞ்ஞானிகளும், தொழிலதிபர்களும் கல்வி போதிப்போரும் இன்று கம்ப்யூட்டரை மிக அதிகமாகப் பயன்படுத்துகின்றனர்.

கம்ப்யூட்டர், ''ஆமாம்; இல்லை'' என்ற அடிப்படையில் இயங்குகிறது என்று சொன்னால் அந்தத் தத்துவத்தை மிக எளிதாக்கிவிட்டது போல் தோன்றும். உண்மையும் அதுதான். கம்ப்யூட்டருக்கு நாம் கொடுக்கிற பல தகவல்களை அது சேமித்து வைத்துக் கொண்டு பிறகு நமது பிரச்னையை, 'ஆமாம், இல்லை' என்ற அடிப்படையில் படிப்படியாகத் தர்க்கரீதியில் அணுகி அலசி இறுதியில் சரியான பதிலைத் தருகிறது. இந்தவிதமாக ஒரு மிகப் பெரிய வாசகசாலையைக் கம்ப்யூட்டருக்குள் அடக்கி விடலாம். பிறகு கல்கி அவர்கள் தமது வாழ்நாளில் எழுதிய எட்டாவது நாவலில் இருபத்தொன்பதாவது பக்கத்தில் நாலாவது வரியில் என்ன இருக்கிறது என்று கேட்டால் அந்த வரியைக் கம்ப்யூட்டர் கணக்காக எழுதிக் கையில் கொடுத்து விடும்








அமெரிக்காவில் கம்ப்யூட்டர், பிரிட்டிஷ் கடற்படைத் தளபதியும் சரித்திர நாயகனுமான நெல்ஸன் கையாண்ட போர்த்தந்திரம் மிகச் சிறப்பானதென்று சொல்லி நெல்ஸனின் புகழுக்குப் புகழ் சேர்த்திருக்கிறது. இரண்டாவது உலக யுத்தம் தவிர்க்கப்பட்டிருக்கலாம் எனக் கூறி வேறு பல சரித்திர புருஷர்களின் மானத்தைக் கப்பலேற்றியும் இருக்கிறது!

நகர மின்சார இலாகாவில் கம்ப்யூட்டர்களை நிறுவியதால் தமக்கு ஏற்பட்ட அனுபவத்தை ஓர் அமெரிக்கர் விவரித்தார். ஒரு சமயம் அவர் வீட்டைப் பூட்டிக் கொண்டு ஒரு மாதம் வெளியூர் போயிருந்தார். திரும்பிய பிறகு மின்சாரத்துக்கான பில் வந்ததாம். நாம்தான் மாதம் முழுவதும் ஊரில் இல்லையே? மின்சார 'சப்ளை'க்கு ஏன் பில் வருகிறது?' என்று எண்ணியபடியே உறையைப் பிரித்துப் பார்த்தார் பில், சைபர் டாலர்கள், சைபர் செண்டுகளுக்கு இருந்தது. சிரித்துக்கொண்டே கிழித்துப் போட்டு விட்டார் அவர்.

கம்ப்யூட்டர் அவரை விடவில்லை; பழைய

பாக்கியாகிய சைபர் டாலர்கள், சைபர் சென்டுகளுக்கு விடாமல் வாரமொரு முறையில் அனுப்பிக் கொண்டே யிருந்தது. அவருக்கு எரிச்சல் தாளவில்லை! கடைசியில் இதற்கு என்ன வழி என்று யோசித்து, சைபர் டாலர்கள், சைபர் சென்டுகளுக்கு ஒரு செக் எழுதி அனுப்பினார், மின்சார அலுவலகத்துக்கு. இரண்டு நாட்களில் ரசீது வந்தது, சைபர் டாலர் சைபர் சென்டுகளுக்கு! அத்துடன், ''கணக்கு நேராயிற்று, நன்றி!'' என்றும் கம்ப்யூட்டர் குறிப்பிட்டிருந்தது!

அமெரிக்க யுவர்களுக்கும் யுவதிகளுக்கும் இடையில், இன்று பொருத்தம் பார்த்து ஜோடி சேர்த்து வைக்கும் வேலையைக்கூட கம்ப்யூட்டர் ஏற்றுக் கொண்டிருக்கிறதென்றால் அதன் பெருமையை என்னென்பது!

கம்ப்யூட்டர் உபயோகமான ஒரு மகத்தான முன்னேற்றம்தான். அமெரிக்கர் இன்று கம்ப்யூட்டருக்கு அடிமையாகி யிருக்கிறார்கள்.

தொழிலகங்களிலும் வர்த்தக உலகிலும் நாளுக்கு நாள் கம்ப்யூட்டர்களின் உபயோகம் அதிகமாகி வருவதைப் பார்த்து, ''இதனால் வேலை வாய்ப்புக்கள் குறையாதா?'' என்று நான் கேட்டேன்.

''சாதாரணமான அலுவல்களைச் செய்பவர்களுக்கு வேலை வாய்ப்புக்கள் குறையும் நிச்சயம்; ஆனால் நிபுணர்களுக்கு வேலை வாய்ப்புக்கள் பெருகும் உறுதி'' என்றார்கள். எல்லா இடங்களிலும் இதே பதில்தான் கிடைத்தது. ''தானியங்கு இயந்திரமயமான தொழிலகங்கள் உற்பத்தியின் அளவையும் தரத்தையும் பெருக்குவதோடு வேலை வாய்ப்புக்களையும் அதிகரிக்கவே செய்யும். ஆனால் அறிஞர்களுக்கான வேலை வாய்ப்புக்களாக அவை இருக்கும்!''

அமெரிக்க இளைஞர்கள் அறிவாற்றலில் சிறந்தவர்களாக விளங்க வேண்டிய நிர்ப்பந்தமான சூழ்நிலை உருவாகி வருகிறது. கொஞ்சம் மந்தமாக இருந்தால் வாழ்க்கையில் முன்னேறுவது கிடக்கட்டும்; வாழ்க்கையை நடத்துவதே சிரமமாகப் போகும்!

தொழில் வளத்தில் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்துள்ள அமெரிக்காவில் தொழில் வளம் மேலும் பெருக ஆக்கமும் ஊக்கமும் அளிக்கப்படுகிறதென்றால் ஆச்சரியமாக இல்லையா? அத்தனை வளர்ச்சியுற்ற பிறகும் கூட இதற்கு அவசியம் இருப்பதாகவே கருதிச் செயலாற்றுகிறார்கள்!

பெரிய நகரங்களானாலும் சரி, சிறு ஊர்களானாலும் சரி, தொழிலதிபர்களைத் தங்கள்பால் ஈர்க்கப் போட்டி போடுகின்றனர். தங்கள் ஊரில் முதலீடு செய்வதால் தொழிலதிபர்களுக்கு எந்த எந்த விதங்களில் லாபம் என்பதை எடுத்துக்காட்டிப் பட்டியல் தயாரிக்கின்றன.

பாஸ்டன் நகர் உலகப் பிரசித்தி பெற்றது. அது நகருக்கு வெளியே சுற்று வட்டாரத்தில் தொழில் வளம் பெருக வேண்டும் என்று விரும்பி, அங்கு தொழிலகங்களை உருவாக்குவோருக்கு வரிச் சலுகை தருவதாகச் சொல்கிறது!

நியூயார்க், ஸான் பிரான்ஸிஸ்கோ, சிக்காகோ போன்ற நகரங்களுடன் ஒப்பிடும்போது லாரன்ஸ் ஒரு சின்னஞ் சிறு ஊர்தான். அங்கே உள்ள வர்த்தகக் குழு (Chamber of Commerce) பிராஜக்ட் - 71 என்றொரு திட்டம் தீட்டியிருக்கிறது. 1971ம் ஆண்டுக்குள் லாரன்ஸ் நகரைத் தொழில் வளத்தில் எந்த அளவுக்கு உயர்த்தலாம்; தொழிலதிபர்களை எப்படியெல்லாம் இங்கு முதலீடு செய்யச் சொல்லித் தூண்டலாம் என்பதற்காக உருவாக்கப்பட்ட இந்தத் திட்டத்தைச் செயலாக்க எழுபத்தியோராயிரம் டாலர்களைத் திரட்டித் தர சேம்பர்ஸ் ஆஃப் காமர்ஸ் அங்கத்தினர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் பெர்முடா என்பது சிறு தீவு. பிரிட்டிஷாருக்குச் சொந்தமானது. 'பெர்முடாவுக்கு வாருங்கள். அங்கு முதலீடு செய்யுங்கள். ஏழு ஆண்டுகளுக்கு வரிகளிலிருந்து விடுமுறை அளிக்கிறோம்' என்று அறிவிக்கும் விளம்பரப் பலகைகள் பலவற்றை அமெரிக்காவில் கண்டேன் நான். அமெரிக்க முதலீட்டை ஈர்க்க இப்படி வரி விலக்கு அளிக்கிறார்கள் அங்கே.

அமெரிக்காவில் எந்த ஒரு குடிமகனும் எந்த நிமிஷத்திலும் ஏற்றுமதி — இறக்குமதி வியாபாரத்தைத் தொடங்கி நடத்தலாம். நகரசபைக்குப் போய் ஒரு கடிதமும் அத்துடன் ஓராண்டுக்குரிய கட்டணமாக இரண்டு டாலர் பணத்தையும் கொடுத்துவிட வேண்டும்; அவ்வளவுதான். பிறகு அவனுடைய திறமைக்கு ஏற்ப அவனது வியாபாரம் செழிக்கும். வேறு எந்த விதமான தடங்கலோ, சிவப்பு நாடாவோ கிடையாது— மருந்துக்குக்கூட.

இதையெல்லாம் பார்த்தபோது 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்பன போன்ற சித்தாந்தங்களை ஒதுக்கி வைத்து விட்டு இந்தியாவில் உள்ள நாம் உழைக்க வேண்டியதன் அவசியத்தையும், அவசரத்தையும் உணர்ந்தேன்.

தொழில் வளப் பெருக்கத்துக்கு அமெரிக்காவில் காண்பதுபோல் ஆக்கமும் ஊக்கமும் இங்கு இல்லாவிடினும் நமது அரசினர் இடையூறுவது விளைவிக்காமல் இருக்கக் கூடாதா என்ற ஏக்கமும் என்னைக் கவ்வியது.

ஃ ஃ ஃ

**நா**ன் அமெரிக்காவில் தவறவிட்டது ஒரு விமானத்தை. அதனால் எதுவும் குடிமுழுகிப் போய்விடவில்லை என்பதையும் உடனே கண்டு கவலை நீங்கினேன். அடுத்த விமானம் இன்னும் அரை மணி நேரத்தில் கிளம்பும் என்றார்கள். ஒரு பஸ்ஸை நாம் கோட்டை விட்டால் அடுத்த பஸ் எப்போது என்று கேட்போமில்லையா? அதுதான் ஞாபகத்துக்கு வந்தது எனக்கு. கடைசி நிமிஷம் வரை நான் வராததால் என்னுடைய ஸீட்டை நன்றியுடன் ஆக்கிரமித்துக் கொண்டவர் ஒரு மாணவர் என அறிந்தேன். அமெரிக்காவில் உள்நாட்டுப் பயணங்களுக்கு விமானங்களில் மாணவர்களுக்கு டிக்கட்டின் கிரயத்தில் ஐம்பது சத விகிதம் கழிவு உண்டு.

ஆனால் ரிஸர்வேஷன் இடையாது. விமான நிலையத்துக்கு வந்துவிட வேண்டியது. விமானத்தில் இடம் காலி இருந்தால் அரை டிக்கட்டில் பறந்து விடலாம்.

விமானப் பிரயாணிகளுக்குள்ள இன்னொரு சலுகை உள்நாட்டுப் பயணத்தில் எத்தனை எடையுள்ள பொருள்களை வேண்டுமானாலும் உடன் கொண்டு செல்லலாம். உச்ச வரம்பு ஏதும் கிடையாது. விமானச் சத்தமும் (ஒலியல்ல, டாலர்!) அப்படியொன்றும் அதிகமில்லை, அமெரிக்க மக்களின் வாழ்க்கைத் தரத்தை வைத்துப் பார்க்கும்போது.

இவ்வாறிருக்கையில் மக்கள் விமானப் பயணத்தை விரும்பி மேற்கொள்வதில் வியப்பென்ன? காரிலேயே போய்விடுவார்கள். நெடுந் தொலைவாக இருந்தால் விமானத்தில் பறந்து விடுவார்கள். கொஞ்சம் வசதிக் குறைவான மக்கள் பஸ்ஸிலே செல்வார்கள். ரயில்களைச் சீந்துவார் இடையாது.

வாஷிங்டனிலிருந்து பிலடல்பியாவுக்கு ரயிலிலே சென்றேன். ரயில் பிரயாணம் சுகமாகவே இருந்தது. ஆனால் இடையில் ஓரிரு ரயில் நிலையங்களில் வண்டி நின்ற போது அந்த ஸ்டேஷன்களைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. அழுக்கடைந்து பழுது பார்க்கப்படாமல் பாழடைந்தது போல் காட்சி யளித்தன. அவைகளுக்கு வர்ணம் பூசப்பட்டு வருஷக் கணக்கில் ஆகியிருக்கும்! ஆணைப்பட்ட அமெரிக்காவிலா இப்படி ஒரு தோற்றம்!

ரயில்களில் பிரயாணம் செய்வோரின் எண்ணிக்கை மிக மிகக் குறைந்து போனதால் பல ரயில்வேக்கள் நஷ்டத்தில் இயங்குகின்றன, அமெரிக்காவிலே. ஒருசில பகுதிகளில் பண்டங்களை ஏற்றிச் செல்லும் ரயில்கள் லாபம் சம்பாதித்துத் தருகின்றன.

பிலடல்பியாவிலிருந்து நியூயார்க்குக்கு பஸ்ஸிலே சென்றேன். குறைந்த வருவாய் உள்ளவர்கள் பிரயாணத்துக்குப் பஸ்ஸைத் தான் தேர்ந்தெடுக்கிறார்கள். ஈஸிசேர் போல் பின்புறம் சாய்ந்து கொடுக்கும் சுகமான குஷன் வைத்த ஆசனங்கள். வண்டியில் ஆட்டம் என்பது லவலேசமும் இடையாது. வேகமான ஓட்டத்திலும் கடிதம் எழுதலாம்; படிக்கலாம்; அல்லது நித்திரையிலும் ஆழ்ந்து போகலாம்.

பண்டங்களையும் மனிதர்களையும் ஏற்றிச் செல்லும் வேகமான போக்குவரத்து வசதிகள் தொழில் வளப் பெருக்கத்துக்குப் பெரிதும் உதவுகின்றன. டெலிபோனும் காலதாமதத்தைப் பெரிதும் குறைத்து முன்னேற்றத்தைத் துரிதப்படுத்துகிறது. ஐந்து நிமிஷங்கள் டெலிபோனில் பேசி ஒரு முடிவுக்கு வரக் கூடிய விஷயம் பற்றிக் கடிதம் எழுதி இரண்டு நாட்களை வீணடித்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

டெலிபோனில் பல நூறு மைல்களுக்கு அப்பாலுள்ளவர்களுடன் பேசுவதானாலும் கத்திப் பேச வேண்டியதில்லை. மெல்லப் பேசினாலே தெளிவாகக் கேட்கும். டிரங்கால் செய்வதானாலும் ஆபரேட்டர் உதவியை நாடாமல் நாமாகவே நேரடியாக டயல் செய்து கொண்டு பேசலாம்.



அமெரிக்காவில் டெலிபோன் வசதி தனியார் துறையைச் சேர்ந்தது. விதம் விதமான நவீன டெலிபோன்களை உருவாக்குவதோடன்றி லாபகரமாகவும் நடத்துகிறார்கள்.

தவறான முறையில் நாம் டயல் செய்தால் 'ரிக்கார்டு' செய்யப்பட்ட ஒரு பெண் குரல் 'நீங்கள் டயல் செய்வது சரியல்ல. உதவிக்கு ஆபரேட்டரை டெலிபோனில் அழைத்துப் பேசுங்கள்' என்கிறது.

மூலைக்கு மூலை உள்ள பப்ளிக் டெலிபோன்களிலிருந்து 'டிரங்கால்' செய்ய ஆ ப ப ரே ட் ட ரை அழைக்க வேண்டும். எவ்வளவு காசு போட வேண்டும் என்பதை அவள் சொல்லுவாள். ஒரு சமயம் சில்லறை என்னிடம் கணக்காக இல்லை. பதினைந்து சதம் அதிகமாகவே போட்டேன். உடனே ஆப்பரேட்டர் அதைப் பக்கத்திலிருந்து பார்த்தவள் மாதிரி, "பதினைந்து சதம் அதிகமாகப் போட்டிருக்கிறீர்கள். அதனால் நீங்கள் அதிகப்படியாக இரண்டு நிமிடங்கள் பேசலாம். அப்படிப் பேச வேண்டிய தேவை இல்லை என்றால் பெல் டெலிபோன் கம்பெனிக்கு விவரம் எழுதிப் பதினைந்து சதத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்" என்றாள். பிறகு நண்பருடன் பேசத் தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்தாள்.

டெலிபோனிலேயே பிஸினஸ் கான்பரன்ஸ் நடத்தலாம் அமெரிக்காவிலே! அந்த மிகப் பெரிய நாட்டின் நாலு வெவ்வேறு நகரங்களில் ஒரு கம்பெனியின் கிளை அலுவலகங்கள் உள்ளன என்றால் அந்தக் கிளை அலுவலக நிர்வாகிகள் நால்வரும் தலைமைக் காரியாலய நிர்வாகியுடன் ஒரே சமயத்தில் டெலிஃபோனில் பேசலாம். அதே சமயம் தங்களுக்கிடையேயும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளலாம். அதாவது ஒரு மேஜையைச் சுற்றி ஐவரும் அமர்ந்து பேசவேண்டியதை அவரவரும் தத்தமது ஊரிலிருந்தபடியே பேசிவிடலாம்! இதனால் எவ்வளவு செலவு மிச்சம்! எவ்வளவு கால விரயம் தவிர்க்கப் படுகிறது!

மேனாடுகளுக்குச் சென்று திரும்பியுள்ள என்போன்றவர்களுக்குப் பொதுவான ஓர் அநுபவம் தாய்நாடு திரும்பியதும் ஏற்பட்டிருக்கும். நண்பர்கள் அவர்களைச் சந்திக்கும்போது, ''என்ன, பிரயாணம் எப்படி இருந்தது?'' என்று கேட்பார்கள்.

மூன்று மாத அனுபவங்களைக் கூறுமாறு ஒரு கேள்வியைப் போட்டால் என்ன செய்ய? ''பிரயாணம் தானே? பிரமாதம்!'' என்று கூறி நழுவப் பார்ப்பேன்.

ஓரடி எடுத்து வைப்பதற்குள் அடுத்த கேள்வி பிறக்கும். ''சாப்பாட்டுக்கு என்ன செய்தாய்?''

'பாழாய்ப் போச்சு! அமெரிக்கா வரையில் போயும் அன்ன ஆகாரம் பற்றிய கவலை தானா?' என்று எண்ணிக் கொள்வேன். சைவ உணவுப் பழக்கம் கொண்டவர்களுக்கு உண்மையாகவே கொஞ்சம் சங்கடம்தான்! எனினும் குறிப்பிட்ட சில பண்டங்களின் பெயர்களைத் தெரிந்து வைத்துக் கொண்டால் ரொம்ப எளிதாகப் போய் விடும். பான்கேக் வீடுகள் என்று எல்லா நகரங்களிலும் நிறைய உண்டு அமெரிக்காவிலே. விதம் விதமான பான் கேக்குகளும் உண்டு. பொட்டேட்டோ பான் கேக் என்பது நம்முடைய ஊத்தப்பத்தின் அதே ருசி கொண்டு விளங்கும். அதற்குத் தொட்டுக் கொள்ள ஸவர் கிரீம் என்ற பெயரில் தயிர் கொடுப்பார்கள்.

இத்தாலியர்கள் நடத்தும் ரெஸ்டாரண்டுகளில் ஸ்பகட்டி என்று கேட்டால் நமது சேவை போன்ற உணவுப் பொருள் கிடைக்கும். ஆனால் அதைப் பிசிரி உடைத்து விடாமல் நீள நீளமாகவே வைத்திருப்பார்கள் தட்டிலே. ஸ்பூனையும் ஃபோர்க்கையும் வைத்துக்கொண்டு லாவகமாக ஃபோர்க்கில் அதைச் சுழற்றி எடுத்து உண்பது ஓர் அருங் கலை. பழகாது போனால் நமது வாய்க்கும் தட்டுக்கும் இடையில் ஒரு சேவைப் பாலம் அமைத்தவர்களாவோம்! பீட்ஸா என்பதும் இத்தாலிய உணவுப் பொருளே. ஏறக்குறைய நமது அடையை ஞாபகப்படுத்தும். எக்பிளாண்ட் பார்மஜானா என்பதைக் கத்திரிக்காய் பஜ்ஜியுடன் ஒப்பிடலாம்.

மெக்ஸிகன் ரெஸ்டாரண்டுகளில் காரசாரமான உணவு கிடைக்கும். ஸ்பானிஷ் ரைஸ் என்று கேட்டால் ஊறுகாய் விழுதைப் போட்டுக் கலந்து பிசைந்த சாதம் போன்று அது தோற்றத்திலும் ருசியிலும் இருப்பதை உணரலாம். இதற்குத் தொட்டுக்கொள்ள எலுமிச்சம் பழச் சாறு பிழியப்பெற்ற பச்சைக் காய்கறித் துண்டங்களை ஸலாட் என்று கேட்டுப் பெறலாம்.

அமெரிக்காவிலுள்ள யூதர்கள் பலருக்கு மரக்கறி உணவுப் பழக்கமும் புலால் ஒதுக்கும் கொள்கையும் உண்டு. ஜுயிஷ் ரெஸ்டாரண்டுகளில் ருசியை ரசிக்கிறோமோ இல்லையோ, தைரியமாகச் சாப்பிடலாம்.

அமெரிக்கர் அடிக்கடி அருந்துவது காப்பி, விரும்பிக் கொறிப்பது உருளைக் கிழங்கு வறுவல்! எந்த மூலை முடுக்கானாலும் சரி பிளாஸ்டிக் பையில் ஸீல் செய்த உருளைக் கிழங்கு வறுவலை வாங்கிக் கொள்ளலாம். ரொம்ப என்னை மகிழ்வித்த விஷயம் 15 செண்ட் கொடுத்துவிட்டால் எத்தனை கப் காப்பி வேணுமானாலும் அருந்தலாம் என்ற ஏற்பாடு. காப்பி பார்களில் முதல் கப் காப்பிக்குத்தான் காசு. நாம் எழுந்து போகும்வரை மீண்டும் மீண்டும் நம் கப்பை அவர்கள் நிரப்புவார்கள். அதற்கெல்லாம் காசே கிடையாது! அவர்கள் மறந்து போனாலும் 'ரீஃபில் பிளீஸ்' என்று கேட்டுப் பெறலாம் நாம்!

அமெரிக்காவில் கிடைக்கும் உணவுப் பண்டங்களில் நான் மிக மிக ரசித்துச் சாப்பிட்டது ஐஸ்கிரீமை.

திரும்பிய பக்கமெல்லாம் தோற்றமளிக்கும் ஹோவர்டு ஜான்ஸன் உணவு விடுதிகளில் ஒன்றல்ல; இரண்டல்ல, நாற்பத்திரண்டு வகையான ஐஸ்கிரீம்களை விற்கிறார்கள்! ஒவ்வொரு நாளும் ஐந்தாறு ஐஸ்கிரீம்களைச் சப்புக்கொட்டிச் சுவைத்துக் கொண்டிருந்தேன் நான். மூன்று மாத உலகச் சுற்றுப் பயணத்தில் அரை வயிற்றுக்குச் சாப்பிட்டுப் பாதி உடலாகத் திரும்புவார் என்று சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்த என் மனைவிக்குப் பெரிய ஏமாற்றமளிக்க எனக்கு உதவியது ஐஸ்கிரீமே. எடை குறைந்து எழில் கூடித் திரும்புவார் கணவர் என எதிர்பார்த்தாள் என் மனைவி. அந்தத் திருப்தியை அவளுக்குக் கொடுத்து விடுவேனா நான்? சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் ஐஸ்கிரீமை வாங்கி ஒரு கை பார்த்தேன்.

ஒரு நாள், விற்பனை இயந்திரத்துக்குக் காசு போட்டு ஐஸ்கிரீமைப் பெற்றுச் சுவைத்துக் கொண்டிருக்கையில் பக்கத்தில் ஓர் அமெரிக்கர் வந்து நின்று, ''ரொம்பச் சுவையானது தான். ஆனால் எடையைச் சுலபமாக அதிகரித்து விடும்'' என்றார்.

அவர் குரலில் ஓர் ஏக்கம் தொனித்தது. எடையைக் குறைக்க நாவைக் கட்டுப்படுத்தி வைத்திருப்பவர் போலும்.

''நான் எடை பார்க்கும் யந்திரத்தின் மீது ஏறி நிற்பதே கிடையாது. அப்படி நின்றால் தானே நமக்கு நம் எடையைப் பற்றிய கவலை ஏற்படப் போகிறது?'' என்றேன்.

''நல்ல ஏற்பாடுதான்'' என்றார் அவர்.

''ஆனால் இந்தக் கொள்கைக்கு விதி விலக்காக ஒரே ஒரு இடத்தில் மட்டும் எடை பார்க்கும் மிஷினில் ஏறி நின்றேன்'' என்றேன்.

''எங்கே அது?''

''நியூயார்க் 'பிளேனடோரியத்தில்'. அங்கு சந்திர மண்டலத்தில் என் எடை என்னவாக இருக்கும் என்று காட்டும் ஓர் இயந்திரம் இருந்தது. தைரியமாக அதன் மீது ஏறி நின்றேன். எடையைப் பார்த்தேன். பரம திருப்தியுடன் இறங்கினேன்.''

அந்த அமெரிக்கர் சிரித்தார். ''உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் வருகிறேன்; உங்களுக்கு எல்லா நலன்களும் உண்டாகட்டும்!'' என வாழ்த்தி விடைபெற்றுச் சென்றார்.

# அரவிந்த்



## விதவிதமான துணிகளின்

## உலகு

பாப்ளின்கள்
ஷர்ட்டிங்குகள்: ஸ்ட்ரைப், டாபி, செக், பைஜாமா
வேஷ்டிகள்: ப்ளாடினம், ராஜா ஸ்பெஷல்
பொலினோஸ்ட் லான் 5531
சூட்டிங்குகள்: காபர்டின்
ப்ரிண்டுகள்: ப்ரிண்டெட் லான்கள், வாயில்கள், பாப்ளின்கள்.
நெசவு செய்த கலர் புட்டாக்கள்:
வெளுத்த மற்றும் புட்டாக்களில்
2x2 ஃபேன்சி ஃபுல் வாயில்கள்.

SANFORIZED

TERILIZED® AND
TERILIZED DOUBLE TESTED
®REGISTERED USERS

அரவிந்த்

மில்ஸ் லிட்./ அகமதாபாத்

LALBHAI GROUP

4-69

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: திரு. அஜித்பாய் ஜெயந்திலால் சோமாபாய் படேல் & கோ, கிடங்குத் தெரு, சென்னை. ஏகபோக ஏற்றுமதி ஏஜெண்டுகள்: திரு. லால்பாய் எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட், கண்ட்ரக்டர் பில்டிங், நிக்கோல் ரோடு, பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்—1.

# ஆழ்கடல் (நாடகம்)

நந்தகுமார் ஒரு பிரபல சினிமா டைரக்டர். ஆனால் அவர் மனைவி அமலா? அவள் ஒரு நாட்டுப்புறத்துப் பெண். பொன்னம்மா என்ற அவளது இயற் பெயரை அமலா வென்று மாற்றி அவளை மனைவியாக்கிக் கொண்டார் டைரக்டர். அவருக்குப் பெயரும் புகழும் பணமும் வந்து குவிந்தன. மனைவி அமலாவின் பிறந்த நாளைப் பிரமாதமாகக் கொண்டாடினார் நந்தகுமார். அன்று தான் அவர்களுடைய அமைதியான வாழ்வைக் குலைக்க ஒரு சதிகாரன் அவர்கள் வாழ்வில் குறுக்கிட்டான். கமலாவின் பிறந்த நாள் பரிசாக அவளிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து அதைத் தனிமையில் படித்துப் பார்த்து அதில் எழுதியுள்ளபடி நடக்கச் சொல்லுகிறான் அந்த 'வில்லன்'. அமலா அதைப் படித்துப் பார்த்ததும் பதறிப் போகிறாள். அக்கடிதத்தில் பொன்னம்மாள் என்ற பெயரில் அவள் கிராமத்தில் இருந்த போது குமார் என்ற வாலிபனோடு காதல் கொண்டிருந்ததாகவும் அதை அவள் கணவரிடம் தெரிவிக்காதிருக்க வேண்டுமானால் உடனே ரூபாய் ஐம்பதினாயிரம் கொடுக்க வேண்டும் என்றும் எழுதியிருக்கிறது. அக்கடிதத்தைக் கணவன் கண்ணில் படாமல் மறைக்க அமலா எவ்வளவோ முயன்றும் அவர் அதைப் பார்த்து விடுகிறார்.

இனிமேல்தான் நாடகத்தில் முக்கியமான திருப்பம் வருகிறது. அந்தக் கடிதத்தைக் கண்ட டைரக்டர் நந்த குமார் கொஞ்சம் கூடப் பதறாமல் மிகவும் அமைதியாக நடந்து கொள்ளுகிறார். முன்னைக் காட்டிலும் அமலாவிடம் மிகவும் அன்பாயிருக்கிறார்.



நந்தகுமாராக நடித்த எம். ஜி. ராஜன் பாத்திரத்தை உணர்ந்து நடித்தார். அந்தப் பாத்திரத்துக்குப் பொருத்தமான தோற்றமும் அவருக்கு இருக்கிறது. கடைசியில் வில்லனின் கொட்டத்தை அடக்கி அவனைப் போலீஸில் ஒப்படைக்கிற வரையில் அவர் முகத்தில் கண்ட சாந்தமும் நிதானமும் குறிப்பிடத்தக்கவை. வில்லனைச் சந்தித்துப் பேசிச் சிறிதும் ஆத்திரப்படாமல், தம் மனைவியின் நடத்தையைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்ட சந்தர்ப்பம் நன்றாக அமைந்து விட்டது. அமலாவின் கடந்த காலக் காதல் வாழ்க்கைக்குச் சான்றாகக் குமாருக்கு அவள் எழுதிய காதல் கடிதங்களைக் காட்டுவதாக வில்லன் பயமுறுத்திய போது அந்தக் காலத்தில் அமலாவுக்கு எழுத்தறிவு கிடையாது என்பதை அவள் உபாத்தியாயரைக் கொண்டே நிரூபித்தது நாடகத்தின் ஜீவநாடி. அச்சமயம் போலீஸ் அதிகாரியையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு இந்த விவகாரம் முடிந்ததும் வில்லனை அவரிடம் ஒப்படைப்பது நல்ல உத்தி.

சின்னக் கருத்தை வைத்துக் கொண்டு நல்ல கதையைப் புனைந்திருக்கிறார் குமாரி சூடாமணி. ''ஆழ் கடல்'' கல்கியில் வந்த கதை. அதை நல்ல முறையில் நாடகமாக்கிய பெருமை திரு மாலியைச் சேர்ந்தது. அவரே டைரக்ஷன் பொறுப்பையும் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

வில்லனாக வந்தவர், சங்கரன் குட்டி. கனீரென்று பேசி நன்றாக நடித்தார். ஹாஸ்யக் காட்சிகளுக்குக் கண்ணனும், ராமச்சந்திரனும் பொறுப்பேற்று இந்த உணர்ச்சிமயமான நாடகத்தில் ரசிகர்களைச் சிரிக்க வைத்தனர்.

கதாநாயகி அமலாவின் பாத்திரம் இந்திரா தேவிக்கு மிகவும் பொருத்தமாக இருந்தது. மேடைக்கு ஏற்ற நல்ல கவர்ச்சியான தோற்றம்; தெளிவான பேச்சு; காட்சிக்கு ஏற்ற முக பாவங்கள் எல்லாமாகச் சேர்ந்து இந்திரா தேவிக்குத் தனிச் சிறப்பை அளித்து விட்டன. கணவன், தன்னைப் பற்றிய அவதூறை நம்பிவிட்டால் தன் கதி என்னவாகும் என்ற கருத்தை இந்திராதேவியின் நடிப்பில் தத்ரூபமாகக் காண முடிந்தது. அதுவும் வில்லனைச் சந்தித்ததிலிருந்து அமலாவின் செயலில் ஏற்பட்ட தடுமாற்றமும், குழப்பமும், வேதனையும் நாடகத்துக்குத் தனிச் சுவையூட்டிவிட்டன. இந்திரா தேவி அந்தப் பாத்திரத்துக்கு உயிரூட்டி விட்டார். ஒரு கொலைகூடச் செய்யாமல் நாடகத்தை விறுவிறுப்பாகச் செய்தது அதிசயந்தான்!

நல்ல நாடகத்தை நல்ல முறையில் நடித்துக் காட்டிய ஸ்வராஜ் தியேட்டர்ஸ் குழுவினர் பாராட்டுக்குரியவர்கள்.



## டீச்சரம்மா

**‘அதிசயம் ஆனால்...!’**

‘நம்பினால் நம்புங்கள், நம்பா விட்டால் போங்கள்!’

‘டீச்சரம்மா’ படத்தில் ஜெய்சங்கர் சண்டையே போட வில்லை! அதுமட்டுமல்ல. ஜெய்சங்கருக்கு ‘ஸ்டண்ட்’ பண்ணத் தான் தெரியும் என்பதில்லை, நன்றாக நடிக்கவும் அவரால் முடியும் என்பதை இப்படம் நிரூபிக்கிறது. இத்தனை அழகாக இயற்கையாக நடிப்பவருக்கு வீணாகச் சண்டைக் காட்சிகளைக் கொடுத்து ரசிகர்களின் சலிப்பை ஏன்தான் சம்பாதித்துக் கொடுக்கிறார்களோ இந்தப் படாதிபதிகள்?

அதே சமயத்தில் நாகேஷ் பற்றியும் சங்கடப்பட்டது மனம். ஹாஸ்யங்களை உயர்ந்த முறையில் உதிர்க்கக்கூடிய ஆற்றல் அவர் நடிப்பில் இருந்தும் அவரை சரியாகப் பயன் படுத்திக் கொள்வதில்லையே!

காணாமலே காதல் கொண்டவர்கள் சந்திக்கும் சந்தர்ப்பத்தில் காதலித்தவனைச் சந்தர்ப்பம் சதி செய்து பிரிக்க வேறொருத்தியைக் காதலன் காதலியாக — ஏன் மனைவியாகவே ஆக்கிக் கொண்டு திரும்புவதும் அதன் பிறகு ஏற்படும் வழக்கமான குழப்பங்களும் டீச்சரம்மா படத்தில் கதையம்சம் இருக்கிறது (சில பகுதிகள் பழசானாலும் கூட) என்று நினைக்க வைக்கிறது.

விஜயகுமாரி பனிச்சென்று வந்து பேசி நடித்துப் படத்துக்கு நல்ல பெயரைச் சம்பாதித்துக் கொடுத்திருக்கிறார். வாணிஸ்ரீயும் தாம் ஒரு முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் நடிகை என்பதை நினைவூட்டும்படி நடித்திருக்கிறார். முத்துராமனுக்கு வழக்கமாக எல்லாப் படங்களிலும் கொடுக்கப்படும் வழக்கமான அதே பாகம். அவரும் வழக்கம்போல நடித்திருக்கிறார்.

ஜும் ஜும் சண்டை, இனக்கவர்ச்சி நடனங்கள் இல்லாமலிருந்தும், ‘டீச்சரம்மா’ படத்தை விறுவிறுப்பாக உருவாக்கியிருக்கிறார் டைரக்டர் எஸ். ஆர். புட்டண்ணா.

## உலகைச் சுற்றி (ஹிந்தி)

‘அரவுண்ட் தி வோர்ல்ட்’! ஆங்கிலத் தலைப்பு! ஹிந்திப் படம்! ஓர் ஆறுதல் என்னவென்றால் இந்தப் படத்தைப் பார்க்க ஹிந்தியும் தெரிந்திருக்க வேண்டியதில்லை; ஆங்கிலமும் அறிந்திருக்க வேண்டியதில்லை. படம் பார்க்கத் தெரிந்திருந்தால் போதுமானது!



படம் என்றால் அதற்கு ஒரு கதை வேண்டுமே! அந்தக் கதை புரியாமல் தவிக்க நேரிடுமோ என்ற கவலை வேண்டாம். காரணம், கதை என்று ஒன்று இருக்குமானால், அது ஹிந்தித் திரையுலகத்துக்கு நன்கு நெட்டுருவாகிவிட்ட வாய்ப்பாடு.

உலகத்தில் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத ஜீவன்கள் எத்தனையோ, அத்தனை கதைக்குத் தொடர்பு இல்லாத பாத்திரங்கள்! பாத்திரமேற்று நடிப்பவர்களான ராஜ்கபூர், ராஜஸ்ரீ, பிரான், மகமூத், ஓம்பிரகாஷ் — இவர்கள் என்ன சாமான்யப்பட்டவர்களா? தேய்ந்து தேய்ந்து கவடேறிய பாதையில் கவலைப்படாமல் கண்களை மூடிக் கொண்டு உலகம் சுற்றுகிறார்கள்! இவர்களோடு உலகத்தைச் சுற்றும் பொழுது ஒருசில வண்ணக் காட்சிகள் விழிகளுக்கு விருந்து அளிக்கின்றன; பல நாடுகள் பிரமிப்பு ஊட்டுகின்றன. எந்த நாட்டுக்குப் போனாலும் எங்கள் இந்தியத் திரைப்படத்தின் தொன்மையான மரபினை விட்டுக் கொடுக்க மாட்டோம் என்னும் உறுதி படைத்த தயாரிப்பாளர்கள் பாராட்டுக்கு உரியவர்கள்தானே! அதனால் களிப்போடு உலகைச் சுற்றி வரப் புறப்படும் ரசிகர்கள் திரும்பும்பொழுது ஓய்ச்சலோடு — காய்ச்சலோடு திரும்பினால், அதற்குத் தயாரிப்பாளர்களா பிணை?



ஓநாய்க் கோட்டை
18
கதை: வாண்டுமாமா
சித்திரம் ரமணி..
கீழே விழுந்த கந்தன் தம்மைக் கெல்லாம் சமாளித்துக் கொண்டு எழுந்து பார்த்த போது...
அவர்கள் கணவாயின் இடை வெளியை நெருங்கிக் கொண்டிருக்கிறார்களே ஜிம்பு! என்ன செய்வது?
அந்தப் பாறை — கந்தனைக் காப்பாற்றிய அதே பாறை அவனுக்குக் கை கொடுத்தது. பளிச் சென்று ஒரு யோசனை..
ஜிம்பு இதை உருட்டிப் புரட்டி விட்டால்...? இந்தப் பெரும் பாறை அந்த இடை வெளியை மூடி மறைத்து விட்டால்...? ஆம் இது ஒன்றே தான் வழி....ம்...
அத்தனை பெரிய பாறையானாலும் அதை எப்படி தகர்த்தினால் அது உருண்டு விழும் என்பதை அறிவான் கந்தன். முயன்றான் — மூச்சுப் பிடித்தான்...
உருண்டு புரண்டது அந்தப் பெரும் பாறை. அது மட்டுமா, விழுந்தது? தன் பாதையில் இன்னும் பல பாறைக் கற்களையும் தகர்த்துக் கொண்டு சரிந்து, அந்த இடைவெளியை இட்டு நிரப்பியது.
வெற்றி! வெற்றி! கணவாய் முழுவதையும் பாறைக் குவியல்கள் மூடி மறைத்து விட்டன. இனி அவர்களால் என்றைக்குமே சுலபமாக மறுபக்கம் வர முடியாது.
ஆனால்... என் அண்ணன் அவர்களிடம் தானே இருக்கிறான். ஜிம்பு நாம் இனி அவர்களின் இருப்பிடத்துக்குச் — சென்று என் — அண்ணனைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்...


இதோ அவர்கள் குடிலுக்கு அருகே வந்துவிட்டோம்.
எச்சரிக்கையோடு பதுங்கி இருந்து பார்க்க வேண்டும். அதோ வருகிறது ஒரு கூட்டம். ஐயோ! அதென்ன?
அவர்கள் இப்படிக் கட்டித் தூக்கி வருவது யாரை? என் ஆனந்தனையல்லவா? அடப் பாவிகளா..!
ஆனந்தா! கலங்காதே.. உன்னை எப்படியும் இந்தக் கயவர்களிடமிருந்து மீட்பேன்— ஆனால் அவசரப் படக் கூடாது.
புதர்களிடையே சிந்தனை வசப்பட்டிருந்த கந்தன், தலைக்கு மேலே தவழ்ந்து வரும் அபாயத்தை உணரவில்லை.
மலைப் பாம்பு கந்தனைச் சுற்றிக் கொண்டு இறுக்கி அழுத்தியது...
ஜம்பு! என் இடையிலுள்ள கத்தியை எடுத்துக் கொடு..
தொடரும்..

# இனிக்கும் நினைவுகள்

கோமகள்



வசந்தனின் கண்களில் அவன் உள்ளத்தைப் படித்த டாக்டர், அவனுக்கு ஆறுதல் கூறும் நோக்கத்துடன், ''நீங்கள் மனத்தைத் தேற்றிக் கொள்ள வேண்டும், வசந்தன்! நாமெல்லாம் உயிருக்கு ஊறு நேரும் பட்சத்தில் அதை மனித முயற்சியோடு தடுக்க முயலுகிறோம். ஆனால் எதுவும் நம் கையில் இல்லை என்பதற்கு மரணம் ஒன்றே பிரத்தியட்ச உண்மையாக இருக்கிறது'' என்றார்.

''நான்... நான் இழந்து கொண்டு வருகிறேன் என்பதை நன்றாக உணர்ந்திருக்கிறேன் டாக்டர். ஆனால் இத்தனை விரைவில் என்று எதிர்பார்க்கவில்லை. என் அம்மா வெறும் வெளித்தோற்ற உருவமாகவே நிற்கிறாள் இப்போது. ஒரு பக்கத்து 'லங்' முக்கால் பாகமும், மற்றொரு பக்கத்து 'லங்' அரைப் பாகமும் 'டேமேஜ்' ஆகிவிட்டிருக்கிறது. இந்த நிலையில் என்ன செய்ய முடியும்? சில சமயம் பைத்தியக்காரத்தனமாகக் கூடச் சில ஆசைகள் ஏற்படுகின்றன. என்னுடைய 'லங்ஸை' அம்மாவுக்குத் தர முடிந்தால்....?''

''வசந்தன்! கொஞ்சம் அமைதியாயிருங்கள்! உடற்கூறுகளின் சரித்திரத்தை உணர்ந்த நாமே அதாவது டாக்டர்களேகூடச் சில போது இப்படிப் பாசத்தின் வயத்துக்குட்பட்டுப் பரிதவிக்க வேண்டியிருக்கிறது. என்ன இருந்தாலும் நாமும் பலவீன மனம் படைத்த மனிதர்கள்தாமே ......!'' என்றார்.

''டாக்டர்! நேற்று ஒரு விளம்பரம் கண்டேன். அதன் 'காம்போசிஷ'னில் ஒரு மாற்றம்கூட இருக்கிறது. அதை வரவழைத்தால், மேலும் ''லங்ஸ் டேமேஜ்' ஆகாமலிருக்க உதவும் எனக் கருதுகிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் டாக்டர்?''

''ஓ. கே. இது அட்வான்ஸ் கேஸ் என்றாலும் ஓரளவு நமக்குப் பயனளிக்கும் என்றே நானும் கருதுகிறேன். ஆனால் அதற்கு ஆயிரம் ரூபாய் பணம் வேண்டியிருக்குமே. அதோடு அது இந்தியாவில் கிடைப்பதில்லையே! அமெரிக்காவிலிருந்து அல்லவா வரவழைக்க வேண்டும்.....!''

''நான் பணத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டு உங்களைச் சந்திக்கிறேன், டாக்டர்!'' என்று விடைபெற்ற வசந்தன் தாயார் அருகே வந்தான்.

''அம்மா! அப்பாவுக்குக் கடிதம் எழுத வேண்டும். உடனடியாக ஆயிரம் ரூபாய் தேவைப்படுகிறது.''

''ஆயிரம் ரூபாயா? எதற்காக....? என் மருந்துக்காகவா?'' வியப்போடு கேட்டாள் செல்லம்மாள்.

வசந்தன் அன்னையின் கரங்களை அன்போடு பற்றியவாறே, ''ஆமாம், அம்மா! ஒரு புதிய மருந்து இருக்கிறது. அதை வாங்க வேண்டும்....'' என்றான்.

''நம் குடும்பம் இருக்கும் நிலையில் அப்பா ஆயிரம் ரூபாய்க்கு எங்கே போவார்? நம்மை நம்பிக் கடன் தருவார்தான் யார் இருக்கிறார்கள்? எனக்காக, அதிலும் நம்பிக்கையே இல்லாத எனக்காக ஆயிரம் ரூபாய் செலவழிப்பதா? வேண்டாமடா வசந்த். அதைக் கொண்டு நீங்கள் எல்லாம் எத்தனையோ வசதிகளைச் செய்து கொள்ளலாம். என்னை நம்பி அத்தனை பணத்தையும் வீணாக்காதேடா வசந்த்....''

''அம்மா!'' வசந்தனின் கண்கள் கலங்கி விட்டன. ''நான் தொழில் தொடங்கியதும் இந்த ஆயிரம் ரூபாயை வாரத்துக்கொரு முறை

சம்பாதித்து உன் கைகளில் தருவேன். இப்போது எனக்கு நீதான் வேண்டும் அம்மா. செலவழிக்கும் பணம் பெரிதல்ல, அம்மா.....!''

''அப்புறம் உன் இஷ்டம்!'' என்று நெட்டுயிர்த்தாள் செல்லம்மா. ''இந்தப் பணத்தைக் கீதாவிடம் கொடுத்தாலாவது உபகாரமாக இருக்கும்.''

''ஐயோ.... இன்னும் இரண்டு வருஷங்கள் பொறுத்துக் கொள் அம்மா. நான் கீதாவுக்கு எவ்வளவு பணம் வேண்டுமானாலும் அனுப்புகிறேன்!''

என்ற வசந்தனுக்கு என்ன பதில் சொல்வான் செல்லம்மா?

**ஹா**ஸ்டலை அடைந்த போது, பணம் சம்பாதிக்கும் வழிகளை எண்ணி எண்ணி அவன் மூளை கொதிப்பேறிக் கிடந்தது. ஒரே தவிப்பில் நிலைகொள்ளாமல் தவித்த அவனுக்குச் சீலியாவை உடனே காணும் ஆவல் பெருகியது. உடை மாற்றிக் கொண்டு வார்டை நோக்கி நடந்தான். சீலியா வார்டில் உட்கார்ந்திருந்தாள். அவனைக் கண்டதும், ''இன்று உங்கள் தாயாரைப் பார்க்கச் சீக்கிரமாகவே போய்விட்டு, சீக்கிரமாகவே திரும்பி விட்டீர்கள் போலிருக்கிறதே!'' என்றாள்.

''ஆமாம்!''

''ஏன் வாட்டமாகக் காணப்படுகிறீர்கள்?''

அன்னையின் நிலையை விளக்கி அவன் சொன்ன பதிலைக் கேட்ட சீலியா, ''இதற்கு நான் ஒரு யோசனை சொல்கிறேன். கொஞ்சம் முனைந்து பாருங்களேன்! 'காப்பியம்' பத்திரிகையில் சிறு



கதைப் போட்டி அறிவிப்பு வந்திருக்கிறது! முதற்பரிசு எழுநூறு ரூபாய், இரண்டாம், மூன்றும் பரிசுகள் முறையே இருநூறும், நூறும். ஒவ்வொரு மனிதனும் தன் ஆயுளில் குறைந்தது ஒரு நல்ல கதை எழுதலாம் என்பது என் எண்ணம் !'' என்றான்.

''நீ சொல்வது மெய்தான்! ஆனால் அதற்குரிய திறமையும், பொறுமையும் எனக்கு ஏது ?''

''முயற்சி செய்து பாருங்களேன் ! இப்படிப்பட்ட போட்டிகளின் மூலமே பல புதிய எழுத்தாளர்கள் உருவாகிறார்கள், வெற்றியும் காண்கிறார்கள். அப்படிப்பட்டவர்களில் நீங்களும் ஒருவராக ஏன் இருக்கக் கூடாது? காப்பியத்தில் போட்டி முடிவைத் தெரிவிக்க நாள் கடத்த மாட்டார்கள்!''

''இன்றிரவு எழுதிப் பார்க்கிறேன். ஆனால் ஒன்று; திருத்தித் தருவாயல்லவா.......?''

'' நான்..... நானு....? எனக்கென்ன தெரியும் அதைப் பற்றி?''

''நீ வகையாக மாட்டிக் கொண்டு விட்டாய், சீலியா. கதை எழுதுவது குறித்து இத்தனை புத்திமதிகள் கூற எழுத்தாளன் ஒருவனைத் தவிர வேறு யாருக்கு வரும்?'' என்றான் வசந்தன்.

சீலியா எதுவும் பேசாமல் சிரித்தாள்.

## 6. மழை விட்டும் தூவானம்!

**வா**ர்டில் காலை நேர ஊசி போட வேண்டியவர்களைக் கவனித்து விட்டுச் சீலியா ஓய்வறைக்கு வந்தபோது மேசையின் மீதிருந்த ஒரு காகிதச் சுருளை எடுத்து அவளிடம் தந்தான் வசந்தன்.

''இது என் கன்னி முயற்சி. புதிதாகப் புனைந்தோ, கற்பனை புரிந்தோ எழுத வில்லை. விடியற்காலை நேரம் எழுந்ததும் நான் என் அகத் தெய்வத்தை முதலிலும், புறத் தெய்வத்தை இரண்டாவதுமாகத் தொழுவது வழக்கம்.....'' என்றான்.




அவன் தொடரு முன்பே சீலியா குறுக்கிட்டாள்:

''ஒரு சந்தேகம். உங்கள் அகத் தெய்வம் எது, புறத் தெய்வம் எது?''

''என் அகத் தெய்வமாக முதலில் இடம் பெற்றவர் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்! இரண்டாவது என் தாயார்.....!''

சீலியாவின் மேனி சிலிர்த்தது. உருவமற்றுவிட்ட, பூத உடலை நீத்துவிட்ட ஓர் உயர்ந்த பிறவியை அகத் தெய்வமாகவும், ஈந்த அன்னையை, எதிரில் நிற்கும் தெய்வத்தை, கண்கண்ட தெய்வமாகவும் போற்றும் வசந்தனின் மன நிலையை ஊடுருவிக் கண்ட போது புத்தொளி படர்வது போலிருந்தது. ''அதனால்தான் உங்களைச் சங்கர் அடிக்கடி 'பரமஹம்ஸர்' என்றும், 'அம்மா பிள்ளை' என்றும் விளிக்கிறார் போலும்!'' என்றாள்.

''தெய்வத் தன்மையைத் தன் மேனியில் தோய்த்துக் கொண்டு சிறப்புற்ற என் அன்னையைப் பற்றிய சம்பவம் இது. அவள் வாழ்வு பெரிய காவியம். அதைத் தீட்டும் திறமை எனக்கு இல்லை. எனவே, அம்மாவின் வாழ்வில் நடந்த எத்தனையோ நிகழ்ச்சிகளில் ஒன்றைத் துண்டித்துத் தனி உருவம் தர முயன்றிருக்கிறேன். உண்மைச் சரிதத்தின் நிகழ்ச்சி ஒன்றை அப்படியே எடுத்துக் கையாண்டிருக்கிறேன்.''

''அப்படியா ?''

உணவு அருந்த ஹாஸ்டலுக்கு வந்த போது சீலியா வசந்தனின் கதையைக் கையோடு எடுத்து வந்திருந்தாள். படிக்கப் படிக்க மேனி புல்லரிக்கும் அந்த நிகழ்ச்சியின் உணர்வுகள் அவளைத் திகைக்க வைத்தன. அழகான ஒரு காவியத் திறன் அமைந்த கதை என்பதில் ஐயமில்லை என்று முடிவு கட்டியவள் ஒரு சில திருத்தங்கள் கொடுத்து மெருகேற்றினாள். பணிக்குத் திரும்பியவள், ''உங்கள் கதை வெகு அருமை, டாக்டர்!'' என்று கூறியதைக் கேட்டு வசந்தன் உண்மையிலேயே பெருமகிழ்வுற்றான்.

ஃ ஃ ஃ

**இ**ன்னும் மூன்று தினங்கள்! மூன்றே தினங்கள்! வாழ்வில் தித்திப்பான அநுபவத்தைக் கட்டிக்காட்டிய அந்தச் சூழ்நிலையிலிருந்து சீலியா, ஏன், வசந்தனும் கூடத்தான் விலகிவிட வேண்டியிருக்

ரும். இதற்கு முன் 'இன்டர்னி'யாக இங்கு அநுபவம் கற்றபோது இந்தப் பிரசவ ஆஸ்பத்திரியை விட்டுத் தொலைய மாட்டோமா என்றிருந்தது. இப்போதோ இந்தப் பகுதி முடிகிறதே என்ற கவலை! இனி அடுத்த போஸ்டிங்கில் வசந்தன் வேறாகவும், சீலியா வேறாகவும் பிரிந்து விடலாம் அல்லவா? இதை நினைத்த போது அவள் மனத்தில் சோகம் கிறலிட்டது.

ஆனால் மூன்று தினங்களுக்குப்பின் தன்னையும், வசந்தனையும் ஜோடி மாற்றாமலேயே 'ஸ்கின் டிபார்ட்மென்டு'க்கு மாற்றியிருக்கிறார்கள் என்பதை அறிந்தபோது சீலியா பெரிதும் மகிழ்வுற்றாள்.

தோல் சம்பந்தப்பட்ட பகுதியில் அடுத்த நாளே வசந்தனும், சீலியாவும் பணி புரிய ஆரம்பித்தனர். பிரசவ ஆஸ்பத்திரியைப் போல் இரவு பகல் ஓயாமல் அங்கு வேலை இருக்கவில்லை. அந்த ஓய்வு மீத்துக் கொடுத்த நேரங்களில் இருவரின் உள்ளங்களும் ஒன்றையொன்று புரிந்து கொள்ள முயன்றன. அம்முயற்சியில் மூளும் கிளர்ச்சி அதிசயமான சுகத்தை அளித்தது. ஆனால் அது வெறும் கவர்ச்சியாகவோ உடல் தேவைக்கு நாடும் துணையாகவோ வளர்ச்சி பெறவில்லை. நினைவில் கனல் மணக்கும் காதல் அது. உணர்ச்சி வெள்ளமாகப் பீறிடாத காதல் அது. பொங்கும் கடலாகக் கொந்தளிக்காத நேர்மை அது!

சீலியாவின் கவர்ச்சி மிகுந்த எழில் போதையாக வசந்தனின் மனத்தில் தேங்கியதில்லை. அவளது உதடுகளின் மென்னகையும், கண்களின் புன்சிரிப்பும் கவர்ந்திழுத்தாலும் மனவிளிம்பின் கட்டுப்பாட்டில் மட்டுமே உறவாடியது.

இந்த நினைவின் களிப்பிலும் அவன் தன் அன்னையின் நினைவை மறக்கவில்லை. மனத்தின் பலத்தில் மட்டும் அந்த ஒளிவிளக்கு எத்தனை நாட்கள் அணையாமல் எரிந்து கொண்டிருக்க முடியும்?

அன்னைக்கு என்னென்ன செய்ய வேண்டும், எது எதைச், சாதிக்க வேண்டும் என்று அவன் எண்ணினானே, அவை அனைத்தும் வீண் கனவாய், வெறும் பிரமையாய் விடுமோ? அன்று வசந்தன் தாயாரைப் பார்த்ததும் வெகு சிரமத்துடன் உதடுகளைக் கடித்து விழுங்கினான். 'ஆயிரம் ரூபாய், ஒரே ஒரு ஆயிரம் ரூபாய் இருந்தால் என் அன்னை உருவழியாமல் கொஞ்ச காலம் என் கண்ணெதிரே இருக்க முடியுமே? அது இல்லாததால், கடவுளே, எத்தனை துயரம்? இதற்கு நான் என்ன செய்வேன்? யாரைக் கேட்பேன்? திவாகரனாவது கொஞ்சம் பணம் படைத்தவனாக இருக்கக்கூடாதா? ஓடி வந்து தருவானே! சீலியாவை..... சீ! வெறும் நட்பில் ஓர் ஆண் ஒரு பெண்ணைப் போய் ஆயிரம் ரூபாய் கடன் கேட்பதா? அவள்தான் தர முடியுமா? வீட்டில் என்னவென்று கேட்பாள் அவள்? அது வீண் கற்பனை.''

இப்படி நினைவில் லயித்திருந்தவனை, ''என்னடா, வசந்த்! வந்தது முதல் ஒரு மாதிரியாக இருக்கிறாயே!'' என்றாள் தாயார்.

''ஒன்றுமில்லையம்மா. நீ முன்பு ஒரு தடவை சொன்னாயே! கீதாவின் நாத்தனாரை எனக்குத் தர விரும்புகிறார்கள் என்றும், கீதாவை அடிக்கடி நச்சரிப்பதாகவும்......''

''அதற்கென்னடா, இப்போது?''

''உனக்குப் பிரியமா அம்மா, அதில்?''

''அவள் நல்ல பெண்தான். ஆனால் கொண்டு கொடுக்க வேண்டாமே. நீ சுதந்திரமாகக்கூட உன் மனைவியை அதட்டிக் கேட்க முடியாது. அங்கே கீதா வேறு வார்த்தை வாங்குவாள்.''

''ஆனால் அம்மா! உடனடியாக ஆயிரம் ரூபாய் அவர்கள் தருவதானால், நான் அவளை மணக்கச் சம்மதிக்கிறேன்.''

அவன் முகத்து உறுதியும், பேச்சின் ஆணித்தரமும் செல்லம்மாவை வெருட்டின.

''வேண்டாமடா வசந்த்! என் பொருட்டு உன் வாழ்வை இப்படிப் பணத்துக்கு அடகு வைக்காதே! அணையப் போகும் விளக்கை ஓரளவு கைகளால் மறைக்கலாம். அதற்காக உன் வாழ்வையே பணயம் வைப்பதா? நான் சம்மதிக்க மாட்டேன். உன் காலம் நீண்டது. அது நாளையோடு முடிவதல்ல. நான் உன்னோடு ரொம்ப நாள் இருக்க மாட்டேன்டா. எனக்காக நீ படும் பாடெல்லாம் போதாது என்று உன்னையே பாழடிச்சுக்கப் போகிறாயா? நான் ஒப்பமாட்டேன். இப்படியெல்லாம் பேசாதே. நன்றாகப் படித்தவளாக, மனத்துக்குப் பிடித்தவளாக ஒருத்தியை மணந்து நீ சந்தோஷமாக இருக்கணும். அதை நான் நேரில் பார்க்கக் கொடுத்து வைக்கலேன்னாலும், என் ஆத்மா சந்தோஷப் படும்டா. இப்படியெல்லாம் பிதற்றாதே.''

தாயின் கண்டிப்பும், இரக்கம் ஊறும் தியாகமும் வசந்தனைத் திக்குமுக்காட வைத்தன.

''நீ எத்தனை படிச்சவன்? அதிலும் டாக்டருக்குப் படிச்சவன். இப்படி மனம் கலங்கலாமா? ஓர் உயிர் பிறக்



# பொறுங்கள்!

தரமுள்ள
துணிகள்
விலை
அதிகமென்று
நினைக்கிறீர்களா?

இல்லை, நீங்கள் வாங்குவது டுவின் டஸ்கர் துணிகளாய் இருந்தால்! இந்த ரக துணிகள் உங்களுக்குப் பிடிக்கும்...உறுதியானவை, நீடித்து உழைப்பவை, அதி நேர்த்தியாய் தயாரிக்கப்பட்டவை. விலையிலும் நயமானவை. இவை எல்லாம் மதுரை மில்ஸாரின் பெரிய அளவு உற்பத்தி சௌகரியங்களால் சாத்தியமாகின்றன. ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்—டுவின் டஸ்கர். நயமான விலையில் தரமுள்ள துணிகள்.

ஹார்வி

**டுவின் டஸ்கர்**

துணிமணிகள்

நயமான விலையில்
தரமுள்ளவை

மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை.

மானேஜிங் ஏஜண்டுகள்:
ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

மதுரையைச் சேர்ந்த ஹார்வீஸ்

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது

## அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டைஅழற்சி • பல்வலி

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

**சாப்பிடும் அளவு:**

**வயது வந்தவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர்சொல்படி

A-G-28-48TM




புதிய

**மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிகோலஸ் Ⓝ தயாரிப்பு

கிறதும், மறையறதும் விஞ்ஞான விந்தைன்னு வேதாந்தம் பேசற நீ அழலாமா? என்ன அப்படிச் சின்னஞ் சிறுசாக உங்களை விட்டு விட்டு, இளம் வயதில் நான் போகிறேனு? எனக்கு வயது ஐம்பத்தைந்து ஆகிறது. பிறர் நோயைத் தீர்க்கிறது உன் கடமை. அதற்கு முழு முயற்சியும் பண்ணறே. முடியலேன்னு ஆஸ்பத்திரி யில் உன் பேஷண்டுகளைக் கண்டு நீ அழுவதுண்டா? அதைப் போல்தான் இதுவும்! நீ உன்னுல் ஆன மட்டும் முயற்சி பண்ணினே. அப்புறம் தலை விதின்னு ஒண்ணு இருக்கு. கடவு ளுக்கு எல்லாம் தெரியும்னு பாரத் தைப் போட்டுவிட்டு நிம்மதியாக இரு.''

அது மட்டும் அவனுல் முடிந்தால்.... அப்படி மட்டும் அன்னையின் துயரத்தை மறந்துவிடக் கூடுமாளுல் உலகில் அவனை விடப் பாக்கியசாலி யார்? அப்புறம் அவன் எதற்காக, யாருக்காக வருந் திக் கண்ணீர் வடிக்கப் போகிறுன்? பருவமென்னும் தங்கப் பேழையில் ஜோடி சேர்ந்து கானம் இசைக்க மாட் டானு? அது முடியுமா? அவன் அன்னையின் துயர் தீர்ந்து, அவன் துயர் ஓயுமா?

வான மூட்டத்தில் மேகப் பிசிர்கள் அம்மாவின் எக்ஸ்ரேப் பட எலும்பு களாகத் தெரிந்தன. ''லங்ஸ்,லங்ஸ்'' என்று அவன் வாய் முணுமுணுத் தது. ஒரு பக்கத்து 'லங்'கில் முக்கால் பகுதிக்கு மேலும், மறுபக்கத்து 'லங்' கில் அரைப் பகுதிக்கு மேலும் சேதம் அடைந்த அன்னைக்கு உயிர் கொடுத்து நீடிக்க நினைக்கும் பைத்தியக்காரனைக் கண்டு வானம் எள்ளுவது போல் மழை பிசுபிசுத்தது. கொட்டும் மழை யையும் இலட்சியம் பண்ணுமல் அவன் ஸானடோரியம் ஸ்டேஷனுக்கு வந் தான். மின்னல் ஊசிகளாக இறங்கின. இடிகள் நாட்டிய இசை போல் முழங் கின. மின் வண்டியில் தொத்திக் கொண்ட வேகத்திலேயே 'சட்'டென மனத்துள்ளும் ஒரு மின்னல் தோன்றி யது. 'ஏன் அப்படிச் செய்யக்கூடாது?' என்று எண்ணினுன். கோட்டை ஸ்டேஷ னில் இறங்கும்போது அந்த எண்ணம் முழு உருவம் பெற்றிருந்தது.

**வ**சந்தன் ஹாஸ்டலை அடைந்த போது மழை முழுதும் விட்டிருந்தது. திவாகரனும் அறையில் இல்லை. சலவைக் குப் போய் வந்த புதிய அடுக்கி லிருந்து ஒரு நீல ஹுவா பாண்டை யும், ஹாங்கரில் தொங்கிக் கொண் டிருந்த ஜப்பான் மேஸ்காட் ஷர்ட்டை யும் அணிந்து கொண்டு, தலையைச் சீர்ப் படுத்திக் கொண்டான். 'மெஸ்'ஸுக் குப் போய் இரவுக்கு 'லேட் மீல்ஸ்' சொல்லி விட்டுப் பாதையைக் கடந்த போது மணி நாலரை ஆகியிருந்தது. டையில் பரவாயில்லை, கொஞ்சம் சில்லென்ற குளுங்கியது. இந்தச் சமயத் தில் சிக்கனத்தின் பெயரால் பஸ்ஸுக்கு நின்ருல் காரியம் வியர்த்தம்தான். எனவே, கைத்தட்டலுக்குட்பட்ட டாக்ஸியில் ஏறி அமர்ந்தான்.

போக்குவரத்து நெரிசல்கள், வாக னங்களின் காது செவிடுபடும் ஓசைகள், நடைபாதை மனிதர்களின் 'பாதை யைக் கடக்கிறேன் பேர்வழி' என்று உலகையே கடந்து சென்றுவிட முய லும் சாகஸங்கள், 'டிராபிக்' போலீ ஸையே திசை மாற்றிவிடும் அளவுக்குக் கூட்டம் கூட்டமாகச் செல்லும் பஸ்கள், லாரிகள், சொந்தக் கார்கள் இத்தனை ரகளைகளையும் கடந்து, 'காப்பியம்' காரியாலயத்தை அவன் அடைந்தான்.

''வணக்கம். மன்னிக்க வேண்டும். அலுவலகம் முடியப் போகும் இந்த வேளையில்தொந்தரவு கொடுப்பதற்கு!'' என்று கைகூப்பியவாறே திணர்க்குத் திணறி நின்ருன் வசந்தன், அதிபர் மீனுட்சி சுந்தரத்தின் எதிரே.

அவனது பணிவில் சொக்கிய மீனுட்சி சுந்தரம், ''உட்காரப்பா. நீ யார்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

வசந்தன் நாற்காலியில் உட்கார்ந்த வாறே அவரது முகத்தை நோக் கினுன். அவன் கண்கள் கலங்கின.

**மதிப்புத் தெரிந்தவர்!**




**மொரார்ஜி தேசாய் ஒரு ரூபாய் நோட்டுக்களை எண்ணுகிருர்!**



''ஆமா .... நான் போன மாசம் உனக்கு இருபது ரூபா கடன் கொடுத்தேனே .... மறந்துட்டியா?''

'' சேசே ! இன்னும் ஒரே ஒரு வாரம் 'டைம்' கொடேன்....''

''எதுக்கு?.... மறக்கறதுக்கா?!''

---

குரல் தழுதழுத்தது. மெல்ல இதழ்கள் துடிக்க இரு கைகளையும் மடித்தவாறே பேசினான்: ''இப்படி இரு கைகளையும் நீட்டி ஏந்த நேருவதற்கு நான் வெட்கப் படுகிறேன். ஆயினும் நீங்கள் மனம் வைத்தால் என் அன்னையை உயிர் வாழ வைக்கலாம்......''

''என்னப்பா, புதிர் போடுகிறாய் ? விவரமாகச் சொல்லு!'' அவர் சொற் களில் தெறித்த கனிவு வசந்தனுக்குப் பேசும் தைரியத்தைத் தந்தது.

''நீங்கள் ஒரு போட்டியை அறிவித் திருக்கிறீர்கள் இல்லையா ?''

''ஆமாம்!''

''அதற்கு நான் எழுதியனுப்பியுள் ளேன்.''

''நீ ஓர் எழுத்தாளனா ?''

''இல்லை, சந்தர்ப்ப எழுத்தாளன் ! வெறும் ஆயிரம் ரூபாய்க்கு ஆசைப் பட்டு எழுதியவன் !''

''கதையின் பெயர் ?''

''அன்னை.''

''உன் பெயர் வசந்தனா ?''

''அந்த அபாக்கியவான் நான்தான்.''

''நீ வைத்தியக் கல்லூரியில் படிக்கிறா யல்லவா ? முகவரிகூட....''

''ஆம்.''

''நாங்கள் ஒவ்வொரு கதையையும் வந்ததுமே படித்துத் தகுதி நிர்ணயம் செய்து விட்டோம். நேற்றோடு முடிவுத் தேதி முடிந்துவிட்டது. எனவே இன்று முதல் பரிசுக் கதை நிர்மானமாகி விட்டது.....!''

''எனக்குத் தெரியும், எனக்கு ஒரு நாளும் பரிசு கிடைக்காது என்று!''

''எழுத்தாளனுக்கு இந்த அவநம் பிக்கை இருக்கலாமா ?''

''நான் எழுத்தாளனே இல்லையே!''

''இல்லை, நீதான் உண்மையில் 'காப் பியம்' கண்டெடுத்த புதிய, ஆனால் பண்பட்ட எழுத்தாளன் ! முதற்பரிசு பெற்ற 'அன்னை' என்ற உனது கதைக்கு ரூபாய் எழுநூறையும் தர ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்துவோம். இன்னும் ஒரு மாதமாகும்.....!''

வசந்தன் மகிழ்வில் திக்குமுக்காடிப் போனான். ''நன்றி. ஆனால் நான் கேட்க வந்தது....''

மீனாட்சி சுந்தரம் விநோதமாகப் பார்த்தார்.

''அந்த எழுநூற்றுக்குப் பதில் ஆயிரமாக எனக்கு இப்போதே தரு வீர்களானால் எனக்குப் பேருதவியாக இருக்கும். எனக்கு ஒழியும்போதெல் லாம் மருத்துவ நூல்களை மொழி பெயர்த்து உங்கள் பிரசுரப் பகுதிக்கு அனுப்பிக் கடனைத் தீர்த்துவிடுகிறேன். இந்த உலகில் எந்த எழுத்தாளனும் ஒரு பத்திரிகாசிரியரை இப்படிக் கேட் டிருக்க முடியாது.''

''மீண்டும் புதிர் போடுகிறாயே! விஷயத்தை விளங்கக் கூறினால் அல் லவா......?''

''உங்களுக்கு என் கதை அலுக்கா திருக்குமானால்......''

அவன் கதை அவருக்கு அலுக்க வில்லை ; அவர் உள்ளத்தை அசைத் தது. ''உன்னைப் போன்ற வாலிபர்கள், அதுவும் கல்லூரி விடுதிகளில் இருப்ப வர்கள் வீணில் பணத்தை நீராக வாரி இறைக்கிறார்கள். நீயோ உன் தாயின் பொருட்டுக் கூச்சத்தோடு உதவி நாடி என்னிடம் வந்திருக்கிறாய். உன் உணர்ச்சியைப் பாராட்டுகிறேன். தாயைப் போற்றுகிறவன்தான் மொழி யைப் போற்ற முடியும். மொழியைப் போற்றுகிறவனால்தான் தாய் நாட் டைப் போற்ற முடியும். உன் மனத் தில் அவ்வித பக்தி இருக்கிறது. இதை நீ வளர்த்தால் மிகப் பெரிய காரியங் களை யெல்லாம் சாதிக்கும் வல்லமை பெற்று விடலாம்!'' என்று கூறியவர் எழுந்து விட்டார். மறுபடியும் கேட்க வசந்தனுக்குக் கூச்சம்! எனவே வாய்மூடி மௌனியாகவே விடை பெற்றான். **(தொடரும்)**

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.

காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.G.21 TAM.




கொத்தமங்கலம் சுப்பு

அத்தியாயம் 20

## விளையாடியது விதியோ, வெள்ளமோ?

"நிதி மேட்டை நோக்கி ஓடும். நதி பள்ளத்தை நோக்கி ஓடும். விதியோ இரண்டையும் நோக்கி ஓடும்'' என்றார் ஒரு கவிஞர்.

மடை திறந்த வடவாற்று வெள்ளமும் இவ்வாறே பள்ளத்தை நோக்கி ஓடி வந்தது. குடிசைகள் இடிந்து கூரைகள் மிதந்தன. அதன் மேல் கோழிகள் போல் அமர்ந்து சில குழந்தைகள் கதறினார்கள். கரையோரங்களில் இருந்த புற்றுக் களில் நீர் புகுந்ததால் பாம்புகள் மூச்சுத் திணறி நீரின் மேல் வந்து



நீந்தின. அவற்றில் சில அரவுகள் கூரை யின் மேல் ஏறி வருவதைக் கண்டு சில குழந்தைகள் பயந்து நீரில் குதித்தன.

இரு கரைகளிலும் முளையடித்துக் கட்டியிருந்த மாடுகள் வெள்ளம் வரு வதைக் கண்டு ஓடப் பார்த்தன. தும்பை அறுக்க முடியாமல் அவை திண்டாடிய போது முளையுடன் கரை இடிந்து ஆற்றில் விழுந்தன. நீந்த முடிந்த வரையில் நீந்திவிட்டுப் பிறகு கடவுள் விட்ட வழி என்ற வேதாந்த மனப்பான்மையில் ஆற்றின் இழுப் போடு அவை சென்றன. அப்போதும் ஒரு வைக்கோல் போர் ஆற்றில் மிதந்து வருவதைப் பார்த்து அவை ஆசைப் படாமல் இல்லை.

கரையில் இருந்த பெரு மரங்களில் வாழ்ந்த பறவைகள் இரவில் அலறின.

வெள்ளம் மரத்தின் இடுப்பளவு வந்து விட்டது. எங்கே அது ஏறி வந்து தம் கூடுகளையும் அழித்து விடுமோ என்ற பயம் அவற்றுக்கு. ஆனால் நீரில் மிதக்கும் ஒரு கழுதையின் சடலத்தை அவை ஆவலுடன் நோக்காமல் இல்லை. நோக்கினவே அன்றிப் பறந்து வந்து கொத்தினவா ? அதுவும் இல்லை. ஏனென்றால், அவை தங்களுக்குப் பறக்கத் தெரியும் என்பதையே பயத்தில் மறந்து விட்டன.

ஆறு அடைத்திருந்ததால் நார்க் கட்டிலைப் போட்டு அதன் மேல் அமர்ந்திருந்த காதலர் இருவர் தங்கள் இனிய வாழ்வில் வெள்ளம் புகுந்ததைக் கண்டு கரைக்கு ஓடினார்கள். காதலியைக் கரையில் விட்டு விட்டுக் கட்டிலை எடுக்க வந்த வாலிபன் கட்டிலோடு அடித்துச் செல்லப்பட்டான். ஆனால் அப்போதும்கூட அவன் கண்கள் கரையையே பார்த்துக் கொண்டிருந்தன. ''நீ ஜாக்கிரதையா வீட்டுக்குப் போ'' என்று அவன் தன் காதலியை நோக்கிக் கூவினான்.

இவ்வாறு அழிவின் வாயிலிலும் ஆசையை விடாத பிறவிகளின் தன்மைகளை எல்லாம் உலகுக்கு எடுத்துக் காட்டிக் கொண்டே வடவாற்று வெள்ளம் கரை புரண்டோடியது.

மா, வேம்பு, வாகை, மூங்கில் முதலான மரங்களையெல்லாம் எந்த எந்த மரம் என்று பார்க்காமல் ஏதோ கடலுக்குள் வீடு கட்டிக் கொள்ளப் போவது போல் ஆட்களையும் மரங்களையும் அடித்துக் கொண்டு ஓடினாள் மணிமுத்தாநதி. இது, பெரிய இடத்துப் பெண் தன் கணவன் வீட்டுக்குச் சீருவாடு சேர்த்துக் கொண்டு போவது போல் தோன்றியது.

''ஏ, தரையே! தரையே! என் திறமையைப் பார். நான் மனம் வைத்தால் உன் மரங்களையும், மக்களையும் ஒரு நொடியில் அழித்து விடுவேன்''



என்று மார் தட்டிக் கூறுவது போல் தண்ணீர் ஆற்றின் இருமருங்கிலும் தரை மேல் தட்டிச் 'சடேர், படேர், 'சளார், பளீர், சளசள' என்று வெறிக் கூச்சலிட்டது. இதைப் பார்த்த மீன்கள் 'இனி தரையில் மக்களுக்கே இடமில்லை. மச்சங்கள் குடியேறலாம் என்று நினைத்து ஆற்று நீரை எதிர்த்து எகிறிப் பாய்ந்து வந்தன. ஐம்பெரும் பூதங்களில் நீருக்கும் நிலத்துக்கும் ஏற்பட்ட பகைபோல் இக்காட்சி தோன்றுகையில், மனிதனுக்கும் நீருக்கும் வந்த போட்டியில் யார் ஜெயிப்பார்கள் என்று ஒரு கேள்வி கேட்கப்பட்டது.

குயிலியும் சின்னத் தம்பியும் முந்திரிக் கொட்டையும்தான் இந்தக் கேள்வியைப் போட்டார்கள்.

பரிசுப் பொருள்களில் மெருகு அழிவது போல் அவர்கள் ஏறியிருந்த பரிசலும் அழிந்து ஆற்று நீரில் அமுந்தி விட்டது. ஆனாலும் அவர்கள் மூவரது நம்பிக்கையும் அழியவில்லை.

சின்னத் தம்பி விட்டெறிந்த டோலக்கில் ஒரு புறம் தோல் இருந்த தால் அதில் தலையை வைத்துக் கொண்டு தன் இரு கைகளாலும் அதைப் பற்றியபடி குயிலி நீந்தினுள். சின்னத் தம்பி அதிகம் பேசாதவன். ஆதலால் தன் வலிமையை வீணாக்காமல் நீந்தி வந்தான். முந்திரிக் கொட்டை அதிகப் பிரசங்கி. தண்ணீரிலும் வாயைத் திறந்து பேசிப் பேசித் தண்ணீரைக் குடித்துவிட்டு மடைத் தவளை போல் அவனுக்கு வயிறு ஊதிவிட்டது. 'அய்யோ அப்பா' என்று திணறினன். இனி ஆபத்து என்ற நிலையில் குயிலி அவன் கையைப் பிடித்துக் கொண்டு கரையை நோக்கி நீந்தப் பார்த்தாள். அவனே தண்ணீருக்குள் இழுத்தான். அதையும் மீறி, அவள் திரும்பும் போதெல்லாம் நீரின் வேகம் உடம்பு நெடுகிலும் மோதியதால் ஒரு சாண் திரும்பினுல் ஒரு கஜம் இழுத்துப் போகப்பட்டாள்.

இந்நிலையில் முந்திரிக் கொட்டை, ''குயிலி! குயிலி! கரையிலே பாரு. யாரோ குருதை மேலே துரத்திக் கிட்டு வராங்க'' என்றான்.

குயிலியும் சின்னத் தம்பியும் இடது புறம் திரும்பினர்கள். மங்கிய நிலவொளியில் வெள்ளத்தோடு போட்டியிட்டுக் கொண்டு ஒரு குதிரை துள்ளி வருவதைக் கண்டார்கள்.

''ஐயோ! சிப்பாய்!'' என்றான் சின்னத் தம்பி. நிலவொளியில் முகம் தெரியா விட்டாலும் அந்த வீரனுடைய குத்துவாள் பிரகாசித்தது.

''அடே, கத்தாதேடா! குயிலியைப் பிடிச்சுக்கிட்டுப் போயிடுவான்'' என்றான் முந்திரிக் கொட்டை மிகுந்த பயத்துடன்.

''என்னைப் பிடிச்சுக்கிட்டுப் போய் என்னடா செய்வாங்க?'' என்றான் குயிலி.

''என்ன செய்வாங்களா? மங்கையர் விலாசத்திலே கொண்டு போய் அடைச்சுடுவாங்க. அப்புறம் மகாராஜா பார்த்தாலும் பார்ப்பார். பார்க்காட்டியும் இல்லை. அதோட முடிஞ்சுது உன் உலகம்'' என்றான் சின்னத்தம்பி. அவன் உடல் படபடத்தது. அதுவரை பின்னுல் வந்தவன் குயிலியின் பாதுகாப்புக்காக இரண்டே எட்டில் கைகளை வளைத்து நீந்திக் குயிலியின் இடது புறத்தில் வந்தான். ஆனுல் குயிலிக்கு அச்சம் வரவில்லை, அவளுடைய உள்ளுணர்வு ஏதோ சொல்லியது.

அவள் சிரித்தாள்.

''பயப்படாதீங்க! யாராவது காப்பாத்தத்தான் வருவாங்க.''

''அவங்க காப்பாத்தினுலும் ஆபத்து, குயிலி. ஆற்றோடே போனுலும் போகலாம். அரண்மனைக்குள்ளே போகப் படாது'' என்றான் அவன்.

குயிலி திகைத்தாள். அவள் பெண்மை அவளை நடுங்க வைத்தது. ''கற்பை விடுவதைக் காட்டிலும் உயிரை விடலாம்'' என்ற இந்தியப் பெண்மணிகளின் இரத்தம் அவள் உடம்பில் சூட்டை ஏற்றியது. உடலில் புதிய வலு பிறந்தது. நீரின் வேகத்தைக் காட்டிலும் அவள் நீந்தும் வேகம் அதிகமாயிற்று. ஒய்யாரமாக டோலக்கின் மேல் புறத்தில் தலையை வைத்துக் கொண்டு, அதைத் தன் ஒரு கையால் இறுகப் பற்றிக் கொண்டு, மற்றொரு கையாலும் தன் இரு கால்களாலும் தண்ணீரில் தழுக்கடித்துக் கொண்டே நீந்தினுள். உயிர்க் காற்றும் ஓடும் நீரும் இங்கு போட்டியிட்டன.

இவர்களோடு போட்டி போட்டுக் கொண்டே பிரதாபசிம்மரின் குதிரை வெகு வேகமாக ஓடி வந்தது. முட்புதர்களையும் மர வேர்களையும் கடந்து வருவதற்காகப் பிரதாபசிம்மர் குதிரையை விலக்கிய போதெல்லாம் அது விலகவில்லை. ''அவளுக்கு நீந்தத் தெரிந்தால் எனக்குத் தாவத் தெரியும். அவளுடைய இரண்டு கால்கள் வெல்கின்றனவா? எனது நான்கு கால்கள் வெல்லுகின்றனவா, பாருங்கள்!'' என்று கூறுவது போல் நான்கு கால்களையும் உபயோகப்படுத்தி முழுமூச்சாகத் துரத்திக் கொண்டே வந்தது. அதன் குளம்புகளின் ஒலியில், புதர்களில் இருந்த முயல்களும், நரிகளும், திசை

தப்பி ஓடின. அந்தக் குதிரையின் வேகத்தைக் காட்டிலும், இளவரசரின் மனக் குதிரை வேகமாக ஓடியது. தாம் உதவி செய்ய வருவது தெரியாமல், அவள் பயந்து கொண்டு ஓடுகிறாள் என்பதை அவர் உணர்ந்தார். ''ஏ! பெண்ணே! பெண்ணே!'' என்று கூவினார். குயிலியோ மேலும் விரைந்து நீந்தினாள்.

ஆற்று வெள்ளத்தின் இரைச்சலிலே, அவர் குரல் கேட்டதேயன்றி அதன் கனிவு புரியவில்லை குயிலிக்கு. அவள் மேலும் விரைவாகக் கால்களைப் 'பட்பட்' என்று தண்ணீரில் அடித்தாள். அன்னப் பட்சி ஒன்று அடிக்கடி தலையைத் தண்ணீருக்குள் விட்டு எடுப்பது போல், அவளுடைய வெளிறிய பாதங்கள் அவருக்குத் தோன்றின. அவள் உடலின் மீது ஓடிய வெள்ளம், நீராடை உடுத்த நிலமடந்தை போல் அவளைத் தோன்ற வைத்தது. அவளது தலை மாத்திரம் மேலே தெரிந்தது. ஆதலால், அழகிய சர்ப்பம் ஒன்று படம் எடுத்துக் கொண்டே தண்ணீரில் நீந்துவது போல் அவள் தோற்றம் அளித்தாள். அவள் கண்கள் இருண்டன. கைகள் சோர்ந்தன. அவள் தலைக்கு மேலே மூங்கில் பாலம் தெரிவதைக் கண்டாள். பெருகி வரும் வெள்ளம் இன்னும் ஒரு முழம் ஏறி இருந்தால் அவள் பாலத்தை எட்டிப் பிடித்திருப்பாள். என்ன செய்வது? முயன்றும் முடியவில்லை. குதிரை அவளுக்குப் பின்னால் சற்று அருகில் வந்து விட்டது. இனி ஓர் இடம் பார்த்து நீரில் குதித்து அவளைக் காப்பாற்றி விடலாம் என்ற முடிவுக்கு வந்தார், பிரதாப சிம்மர். குதிரை அருகில் நெருங்கி வந்து விட்டவே, அவளுடைய வேகம் அதிகப்பட்டது. இனி அவள் நீந்தினால், அவள் உயிருக்கு ஆபத்து வந்துவிடும் என்று பிரதாபசிம்மர் கருதினார். தம் பரியின் கடிவாளத்தைச் சுண்டி இழுத்தார். மனமும், மாவும் நிறுத்தினால் நின்று விடுவது இல்லை. அது திணறிக் கொண்டே சிறிது தூரம் கால்களைப் பின்னிக் கொண்டு ஓடியது.

அடுத்த கணம், அவர் குதித்திருப்பார். குயிலியைப் பிடித்து அணைத்துக் கொண்டே காப்பாற்றியிருப்பார். அவளும் அச்சம் தெளிந்து ஆனந்தப் பட்டிருப்பாள். ஆம்! கரையேறியிருப்பாள். இச்சமயத்தில்தானா அந்த ஆபத்து நிகழ வேண்டும்? அதுவரை அவளுக்கு ஆதரவாக இருந்த டோலக்



பாட்டி: திருச்சியிலிருந்து வெறுங் கையோடே குழந்தைகளைப் பார்க்க வேண்டாம் என்று பி.யூ.சி. கேள்வித் தாள்களை வாங்கி வந்திருக்கிறேன். கொக ருக்காக இரண்டு சேர்த்துக் கொடுத்திருக்கிறேன்!

பரீட்சை ஹால், சூப்ப ரெண்ட்: இது ஏதுடா வம்பு? கேள்வித் தாள்களை யாரிடம் கொடுத்தாலும் 'தாங்ஸ்! வேண்டாம் ஏற்கெனவே எங்களிடம் ஒன்று இருக்கு. 'வேஸ்ட்' பண்ணாதிங்கோ' என்கிறார்களே!

''பி. யூ. சி. கேள்வித் தாள்கள் அவுட்டாகியிருக்கிறது. பேப்பரில் வந்திருக்கிறது என்றேன். கேள்வித் தாள்கள்தான் பேப்பரில் அச்சாகி இருக்கிறது என்று பேப்பர்க் கடையை நோக்கி எல்லோரும் ஓடி இருர்கள்!''



# தலைவலியா?

# அனாஸின்

## வலி நிவாரணத்திற்கு மேலானது
## ஏனெனில் 4 வழிகளில்
## வேலை செய்கிறது




டாக்டரின் மருந்துக் குறிப்பைப் போல், பல மருந்துகள் இணைந்த ஒப்பற்ற கலவையாகிய அனாஸின் மூலம் 4—வழி நிவாரணம் அதி விரைவில் கிட்டும்:

1. தலைவலியைத் தணிக்கிறது அனாஸின் —வேகமாக.
2. தலைவலிக்கு வழக்கமான காரணமாக அமையும் படபடப்பை ஆற்றுகிறது அனாஸின்.
3. தலைவலியோடு இயல்புடன் இணைந்துவரும் சோர்வை வெல்லுகிறது அனாஸின்.
4. வாட்டத்தைப் போக்கி அகமும் முகமும் பழையபடி மலரச் செய்கிறது அனாஸின்.

அனாஸின், சளி, ஃப்ளூ, பல்வலி, உடல்வலி ஆகியவற்றையும் தணிக்கிறது.

**அதி வேகமாக நிவாரணம் பெற 2 அனாஸின் சாப்பிடுங்கள்**

Regd. User : Geoffrey Manners & Co., Ltd.

இன் தோல் நீரில் நனைந்து இத்து விட்டது. பலாக் கட்டையின்மேல் ஒட்டியிருந்த பசை கரைந்து விட்டது. தோல் கழன்றது. டோலக்கில் நீர் நுழைந்தது. அது ஆற்றின் அடியை நோக்கி விரைந்தது. சின்னத் தம்பியின் ஒரே ஒரு ஆசையும் நீரில் அமுங்குவதைக் கண்ட குயிலி அதை எடுப்பதற்காகத் தானும் தண்ணீருக்குள் முக்குளித்தாள். இதைக் கண்ட சின்னத் தம்பியும், அவளைத் தேடிக் கொண்டு முக்குளித்தான். தண்ணீரில் இருந்த தலைகளைக் காணாமல் இளவரசர் திடுக்கிட்டார்.

நீரில் அமுங்கி விட்டாளோ என்ற திகில் அவருக்கு ஏற்பட்டது. குதிரை நின்றது. அவர் கண்களை ஆற்றின்மேல் ஓட விட்டுத் தேடினார். அந்த வலையில் குயிலி அகப்படவில்லை. அப்போது மளமளவென்று ஒரு சத்தம் கேட்டது. ஆற்றங்கரையில் இருந்த ஒரு பெரிய மாமரம் வேரற்றுப் பேரிரைச்சலுடன் ஆற்றின் குறுக்கே விழுந்தது. 'ஏ, நீரே! நீயே என்னை வளர்த்தாய். நீயே என்னை அழிக்கிறாய்' என்று முறையிடுவது போல் 'ஓ'வென்று அலறியது, அந்த விருட்சம். ஆற்றின்மீது அது விழுந்த வேகத்தில்சுமார் நூறடி தூரத்துக்குச் சளேரென்று தண்ணீர் சிதறியது. கட்டுக்கடங்காத பிரதாபசிம்மரின் குதிரை இதைக் கண்டு வெறி கொண்டு துள்ளி ஓடியது. காட்டுக்குள் இருந்த ஒரு மணல் மேட்டில் அதன் கால்கள் சிக்கி அவரையும் தள்ளி அதுவும் விழப்போகையில் பிரதாபசிம்மர் சாதுரியமாக ஒரு மரத்தின்

, . " " ( ) — ;

## பங்சுவேஷன் பாடல்கள்



1

தூரம்.
நடந்தேன்
மெதுவாய்,
, , ,
அடைந்தேன்
இடத்தை
உடனே
.
தம்பி
வந்தான்
பஸ்ஸில்
அதுவோ
வழியில்
—

2

திருமண வீடு
இரைச்சல்; ஒரே
" " " " " "
" " " "
வைபவம்
காண
வந்த இடத்தில்
சிந்தனையில் ஆழ்ந்தேன்.
ஒரே
, ,





3

பார்த்தாள்.
அந்தப்
பார்வைக்குப்
பொருள் :
!
பார்த்தேன்.
அந்தப்
பார்வைக்குப்
பொருள் :
?
பார்த்தாள்.
அந்தப்
பார்வைக்குப்
பொருள் :
×

4

காட்டுள் இருந்தேன்.
ஒரு கால் ஒடிந்தது
பின்னர் பல நாள்
கட்டுள் இருந்தேன்



- தம்பி சீனிவாசன்



ரேஷன் கடைகளில் கோதுமை கிடைக்காமல் நாம் அவதிப்படுகிறோம் இங்கே. ஆனால் பஞ்சாபில் மாட்டுத் தீவனங்கள் விலை அதிகமாக இருப்பதால் அதைவிடக் குறைவான விலையில் கிடைக்கும் கோதுமையை மாட்டுத் தீவனமாகப் பயன்படுத்துகிறார்களாம்.

மத்திய அரசாங்க உணவுக் கட்டுப் பாட்டின் லட்சணம் — மன்னிக்கவும் — அவலட்சணம் இது.

தகவல் : எறும்பு. ஆதாரம் : 'காரவான்'

---

மீது குதிரையை, அணைத்து நிறுத்தினார். சரேலென்று கீழே குதித்து ஆற்றை நோக்கி வேகமாக ஓடி வந்தார். அப்பொழுது 'கலகல'வென்று ஒரு சிரிப்பொலி கேட்டது. அவர் வாயிலிருந்து ஓர் ஆறுதல் பெருமூச்சு வெளி வந்தது. ஆம்! குயிலியும் சின்னத்தம்பியும், முந்திரிக் கொட்டையின் கைகளைப்பிடித்துத் தூக்கிக் கொண்டே ஆற்றின் குறுக்கே கிடந்த அந்த மரத்தின் மீது ஏறிக் கொண்டு இருந்தார்கள். அவள் சிரித்த சிரிப்பு தம் குதிரை வெறித்ததற்காகத் தான் என்று அவர் உணர்ந்தார். அவரும் சிரித்துக் கொண்டார்.

அவரது நெஞ்சக் கனல் சிறிது குறைந்தது. ஆனால் தஞ்சையிலே கனல்பற்றி எரிவது தெரிந்தது. நீல நிறத்த கட்டின் மீது, மாணிக்கம் இழைத்ததுபோல் ஆகாயத்தில் தீக் கொழுந்துகள் தெரிந்தன. அதைத் தொடர்ந்து பெரும் புகையும் சுருண்டு சுருண்டு எழுந்தது. ஆயிரக் கணக்கான மக்கள் 'ஐயோ, ஐயோ' என்று ஓலமிட்டு அலறும் குரல் ஒன்று கலந்து பேரிரைச்சலாகக் கேட்டது.

''துரோகிகள் ஆற்றை வெட்டிவிட்டு அரசர் திரும்பி வரும் பாதையைத் தடுத்துத் தஞ்சையிலேநெருப்புவைத்துள்ளார்கள்'' என்று மனத்துக்குள் ஆத்திரத்தோடு கூறிக்கொண்டார் இளவரசர். குதிரையின் மீது குதித்து ஏறினார். அந்தப் பெண் இனி தப்பிவிடுவாள். ஆறு மரத்தை அடித்துச் செல்வதற்குள் அவள் கரையில் ஏறிவிடுவாள் என்று நினைத்தாரோ, அல்லது அதையும் நினைக்கவில்லையோ தெரியாது. அவர் குதிரை வந்த வழியே திரும்பியதுதான் தெரியும். முன்னைக் காட்டிலும் வேகமாக மூங்கில் பாலத்தைத் தண்ணீர் தொடுவதற்கு முன் அதன் மீது குதிரையை விரட்டினார் பிரதாபசிம்மர். அவருடைய அன்புக் கரம் குதிரையின் அச்சத்தைப் போக்கி இருந்ததால் பரிமா பாலத்தின் மீது பாய்ந்து சென்றது. இன்னும் ஒரு கணம், கண்மூடித் திறப்பதற்குள் அவர் அக்கரை சேர்ந்திருப்பார். அதற்குள் கண்மூடித்தனமான வெறிச் செயல் ஒன்று அங்கு செய்யப்பட்டிருந்தது. அவர் குதிரை பயந்து கனைத்தது. மங்கிய நிலவில் பாலத்தை மூளைகளுடன் சேர்த்துக் கட்டியிருந்த கயிறுகள் யாராலோ வெட்டிவிடப்பட்டு இப்பொழுது அறுந்து கொண்டே வருவதை அவர் கண்கள் கண்டன. இனித் திரும்பவும் வழியில்லை. அவரது இரு குதிகால்களும் குதிரையின் வயிற்றில் ஓங்கித் தட்டின. ''ஜாவ்'' என்று ஆணையிட்டது, அவர் குரல். குதிரை மேலே பறந்தது. பாலம் ஆற்றில் விழுந்தது. பிரதாபசிம்மர் குதிரையோடுகூட வடவாற்றில் தென்கரையில் குதித்தார். இனி கேட்க வேண்டுமா? அடுத்த கணம் தஞ்சையை நோக்கி விரைந்தது, வெண் குதிரை.

கீழவாசலுக்கு வெளியே உள்ள நாளங்காடி தீக்கு இரையாகிக் கொண்டிருந்தது. வரிசையாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த நூற்றுக்கணக்கான நெல் வண்டிகள் எல்லாம் நெருப்புக்கு இரையாகித் தீயின் ஒரு நாள் பசி தேச மக்களின் ஒரு வருஷ உணவைத் தின்று விட்டது. குதிரையின் மீது வீரன் ஒருவன் வருவதைக் கண்டு கையிலே தீவட்டிகளை ஏந்திய ஒரு கொள்ளைக் கூட்டம், அவரைத் தாக்கப் பாய்ந்து வந்தது. வாளை உருவிய வண்ணம் பிரதாபசிம்மர் கீழே குதித்தார். பல தலைகள் உருண்டன. கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் தன் வாளை உருவி அவர் மீது பாய்ந்தான். வாள்கள் மோதின. மின் வெட்டுக்களைப் போல் தீப்பொறிகள் பறந்தன. தலைவனின் வாள் தரையில் போய் விழுந்தது. பிரதாபசிம்மர் அவன் கழுத்தைச்சுற்றித் தம் இடது கையைப் போட்டு அவனை இழுத்தபடி, ''ஏன் தீ வைத்தாய்? உன்னை யார் ஏவியது?'' என்றுகேட்டார். அவன் பதில் சொல்ல வாய் திறந்தான். அப்பொழுது எங்கிருந்தோ வந்து, அவன் முதுகில் ஒரு குத்து வாள் பாய்ந்தது. விடை சொல்லத் திறந்தவாயால் கடைசி மூச்சை விட்டான் அவன். (தொடரும்)

# சங்கீதம்

**ஹா**லைக் கடந்து வலது பக்கம் திரும்பினால் ஓர் அறை; வேலைப்பாடமைந்த வாசல் நிலை; அதில் மேலே குழல் மணிகள் வர்ண வர்ணமாய்த் தொங்கி இளந்தென்றலில் ரம்ய மாய்க் குலுங்குகின்றன... உள்ளே நுழைந்த வுடன்தான் எவ்வளவு அருமையான காட்சி! தானாகக் கரங்கள் குவிந்து, கண்ணிமைகள் தானாக மூடி, இதயமெல்லாம் அந்தத் தெய் வீக வாசம் நிரம்பி உடலெல்லாம் சிலிர்த்து, நான் முதல் முதலில் சில வருஷங்களுக்கு முன்னால் பார்த்தபோது நின்றேன். இன்றும் அப்படித்தான் நிற்கிறேன்!

'தேவி புவனேசுவரி சந்நிதியிலா நாம் நிற்கிறோம்?... எந்த ஊர்க் கோவில்?' என்று சட்டென்று மனம் மயங்கும் அம்பிகையின் முகத்தில் மிளிர்கிற புன்னகை — என்ன திவ்ய அழகு! எதிரே நின்று பேசுவது போலவே ஆஹா! ஆஹா! எவனோ கை தேர்ந்தவன் இவ்வளவு அழகாக ஓவியம் தீட்டிவிட்டான்! அந்தத் தெய்விகத்தையும் அவன் எப்படித் தூரிகையில் கலந்து கொண்டான்! இந்த அறையின் அமைப்புக்கும் இந்த வண்ணச் சித்திரத்துக்கும்தான் எத்தனை பொருத்தம்! எவ்வளவு கலை!... வந்த அன்றிலிருந்து இன்றுவரையில் தினம் தினம் எத்தனை எத் தனையோ தடவைகள் அந்த அழகை ரஸித்து விட்டேன். அலுக்கவில்லை.

அம்பிகையின் படம் எதிரே ஒரு தெய்விக வசீகரம். வலது பக்கம் பால முருகன் பொன் வேல் ஏந்தி மயிலை அணைந்துகொண் டிருக்கும் காட்சி. இடதுபுறம் ஆனைமுகச் சிறுவன் மாம்பழம் பெற்ற பெருமையில் குறும்புச் சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தான். அம்பிகையின் படத்தில் வழக்கம் மாறாமல் கதம்பச் சரமொன்று அலங்கரித்துக்கொண் டிருந்தது. படத்துக்குக் கீழே சின்ன மேடை யில் ஊதுபத்திக் குழாய்கள் வாசனையை மெல்லப் பரவ விட்டுக் கொண்டிருந்தன. தூண்டாமணி விளக்கு மொட்டுப் போல் ஆடாமல் அசையாமல் நின்றது. அறை நடுவே, விரித்த கம்பளத்தில் இந்த உறை கழற்றிய வீணை... ஏன்? என்னவோ 'குபீ' ரென்கிறதே நெஞ்சுக்குள்ளே! இந்த வீணை தனியாகக் கிடக்கிறதே! ஏன்?...

''கல்யாணி!...கல்யாணி!...''

இதயம் படபடவென்று அடித்துக்கொண் டது. மாமியின் கடைசி வார்த்தைகள் 'பளிச்'சென்று நினைவுக்கு வந்தன.

''இந்த வீணைதான் என் தெய்வம்! இந் தத் தந்திகள்தான் என் உயிர்!.. இந்த நாதம் ஆத்ம கீதம்...''

உறை கழற்றிய வீணை தனியாகக் கிடக் கிறதே! கல்யாணி எங்கே போய்விட்டாள்?

''கல்யாணி!...''

மாமி காரியங்களெல்லாம் முடிந்து எல் லாம் ஓய்ந்து விட்டன. எல்லாம்தான் எவ் வளவு விரைவாகப் போயிற்று! மாமி, நெஞ் சைப் பிடித்துக் கொண்டு இதோ, இந்த மூலையில், மாலை வேளையில் விழுந்ததும் விடி யற்காலை உயிர் பிரிந்ததும்...இருபது நாட் களாகி விட்டன. வீணை வருடும் விரல்கள் ஓய்வடைந்து கருகிச் சாம்பலாகிக் கரைந்து ..... மாமி இப்படித் தெய்வமாகி விட் டாளே!...

ஐயோ ! வீணை தனியாகக் கிடக்கிறதே !

''கல்யாணீ.... கல்யாணீ....!''

கல்யாணிதான் வீணையை எடுத்து வைத் துக் கொண்டு உட்கார்ந்திருப்பாள். துக்கம் பொங்கியிருக்கும். அப்படியே வைத்து விட்டுப் போய் அழுது கொண்டிருப்பாள் ! பாவம் ! அவளை யார்தான் தேற்ற முடியும்? அம்மாவைப் பிரிந்த துக்கம் எப்படி ஆறும்?

மாடிப்படிகளில் ஏறினேன். நீல விளக்குகள் மௌனமாய் ஒளியை உமிழ்ந்து கொண் டிருந்தன.

''கல்யாணி....!''

பதிலே இல்லை. எங்கு பார்த்தாலும் 'வெறிச்'சென்றிருந்தது. கல்யாணி குழந்தை யாகவே இன்னும் இருக்கிறாளே!.... மாமி இவளை இப்படிக் கதற அடித்துவிட்டுப் போவாளோ? பெண்ணைப் பற்றி எவ்வளவோ கனவுகள் எல்லாம் கண்டுவிட்டு நெஞ்சு வேகாமல் போய் மறைந்து விடுவாளோ?.... மாமியைப் போன்ற அம்மா யாருக்குக் கிடைப்பார்கள்? அந்த மாதிரி புடம் போட்ட தங்கம் கிடைக்கும் பாக்கியம் யாருக்கு உண்டு? அந்த மாதிரி சாந்தமும் அமைதியும் யாருக்கு இருக்கும்?

மாமிக்கு அப்படி ஒரு வயதா ஆகிவிட் டது, உட்கார்ந்தவுடன் உயிரை விடுவதற்கு? முதல் நாள் வீணைமேல் தவழ்ந்த விரல்கள்



மறுநாள் சாம்பலாகிக் கிடந்தன. இப்பொழுது நினைத்தாலும் நெஞ்சு கத்றுகிறது.

''கல்யாணி!......''

கல்யாணிதான் கட்டிலில் கிடந்தாள். பேச்சு மூச்சில்லை !

''கல்யாணி.....! கல்யாணி....!''

மயக்கமா, அயர்வா, தூக்கமா ?

எனக்கு உடம்பெல்லாம் பதறிற்று. பரபரப்பில் எதுவுமே ஓடவில்லை. என்ன செய்வது? அம்மா மாதிரி.... ஐயோ !

கண்ணீர்க் கறை படிந்த கன்னங்கள் பளபளத்துக் கொண்டிருந்தன....

அது தூக்கமில்லை, அயர்வில்லை, மயக்கம் தான் !

மல்லிகைச் சரம்போல் அவள் துவண்டு கிடந்தாள். அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிடுவதே எனக்குக் கூச்சமாக இருந்தது. தொட்டு எழுப்புவதா ?

''கல்யாணி.....''

வீட்டில் மாமாவும் இல்லை. சமையல்கார அம்மாளும் இல்லை. யாருமே இல்லையே ! யாரைக் கூப்பிடுவது ?

கல்யாணி அசையாமல் கிடந்தாள். மஞ்சள் சங்கிலியாய்ப் பின்னிய இரட்டைப் பின்னல்கள் கருநாகமாய் அவள் மேல் நெளிந்து கொண்டிருந்தன.

இவளை நான் தொட்டு எழுப்புவதா ? மாமி பொறுப்பாளா? என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தேன்.

பக்கத்தில் ஒரு குளியலறை. 'வாஷ் பேஸின்'ல் குளிர்ந்த நீர் கொட்டிற்று. கொஞ்சம் தண்ணீரைக் கொண்டு வந்து முகத்தில் தொடாமல் தெளித்த பிறகு....

''கல்யாணி! என்ன பண்ணுகிறது உனக்கு? ஏன் இப்படி?''

அவள் முகத்தைக் கவிழ்த்து விம்மினாள். என்னால் அந்தச் சோகத்தைத் தாங்கவே முடியவில்லை.

கல்யாணி அழகுக் களஞ்சியம். பரம்பரை பரம்பரையாய்ச் சேர்த்து வைத்திருக்கிற தெய்விக அழகு.... அவளை அப்படி நெருங்கி நின்று பார்க்கவே நான் துணிந்ததில்லை. அவ்வளவு சங்கோசம் எனக்கு..... இவளுடைய அப்பாமுக்குச் சொல்ல முடியாத இந்த அழகு இருக்கிறதே இதுதான், இதுவே



தான் தெய்வமா? இந்தச் சௌந்தர்யம்தான் தெய்வமா என்று தோன்றுகிறது.

"நறுக்"கென்று அவள் எழுந்து முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

"என்ன இப்படிச் சாயங்காலமும் அதுவுமாய்.... அதையே நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. இனிமேல்.... நீ என்ன சின்னக் குழந்தையா என்ன?...."

அவள் பதினேழு வயதுப் பெண்ணாகவா இருக்கிறாள்? இன்னும் குழந்தையாகத்தான் இருக்கிறாள்....

"அழாமல் போய் வீணையை எடுத்து வைத்துக் கொண்டு வாசியேன். இன்று வெள்ளிக்கிழமையாக இருக்கிறது...."

அவள் நான் சொல்வதைப் போல் மாடிப் படிகளில் இறங்கிச் சென்றாள்.

நான் இதுவரையில் அப்படித் தைரியமாக அவளிடம் பேசியதில்லை. இந்த வீட்டுக்கு நான் வரும்போது கல்யாணிக்கு ஐந்து அல்லது ஆறு வயது இருக்கும். சின்னக் குழந்தையாக அப்போது அவள் என்னிடம் ஓடியாடி விளையாடியதுண்டு.... ஆனால் எல்லாம் பன்னிரண்டு வயது வரையில்தான்! அப்புறம் அவள் திடீரென்று மாறிப் போய் விட்டாள். எதிரே நின்று பேசுவதுகூடக் குறைந்து போயிற்று. எனக்கும், அப்புறம் அவளிடம் பேசச் சங்கோசம் வந்துவிட்டது. இயற்கையாகவே இருந்த என் இந்தக் குணம், இன்று வரையில் என்னைவிட்டு அகலவில்லை. நான் இங்கே வந்து பதினொரு வருடங்களாகி விட்டன..... பட்டப் படிப்புப் படித்து முடித்துவிட்டேனே!

இந்த மாமிதான் எனக்குத் தாயாராக இருந்து கவனித்துக் கொண்டிருந்தாள். என்று நான் பன்னிரண்டு வயதுச் சிறுவனாக இந்தப் பங்களாவின் வாசற்படியில் வந்து நின்றேனோ, அன்று முதல் இதோ இருபது நாட்களுக்குமுன் வரை என்னைத் தன் குழந்தைக்குச் சமமாக நடத்தி வந்திருக்கிறாள். மாமிக்குப் பிள்ளைக் குழந்தை இல்லாத குறை நான் வந்த பிறகுதான் தீர்ந்ததாம்! மாமா சொல்லியிருக்கிறார்.

இத்தனைக்கும் நான் மாமிக்கு எந்த விதத்திலும் உறவு இல்லை. எங்கோ ஒரு மூலையில் பிறந்து பெற்றோரை இழந்துவிட்டு அநாதையாய் வந்து சேர்ந்தேன். என் அதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது? நான் மாமியை எப்படியோ கவர்ந்து விட்டேன்!

எங்கோ பிறந்து அநாதையாகி, ஒரு வேளை உணவுக்குக் கெஞ்சிக் கொண்டிருந்த எனக்கு உணவும், உடையும், கல்வியும், இடமும் திடீரென்று தருகிறவர்கள் தெய்வத்தைத் தவிர யாராக இருக்க முடியும்? மாமிதான் நிஜமான தெய்வம்....

பூஜை உள்ளில் இருக்கும் ராஜ ராஜேஸ்வரி படத்தைப் பார்க்கும் போதெல்லாம் அந்த முகச் சாயல் மாமிக்கு அப்படியே இருப்பதைப் பார்த்து நான் பரவசப்படுவதுண்டு. நல்ல சிவந்த முகம், ஒரு மாசு மறு இல்லாமல் — உதயகாலத் தாமரை போல் குளுமையாய் மனசுக்கு ஆறுதலைப் பொழியும் மலர்ந்த முகம். முப்பது வயதிலிருந்து நாற்பது வரை, ஏன் கடைசி வரை அந்த முகத்தில் மாறுதலே வரவில்லை.....

கீழேயிருந்து வீணை ரீங்காரம் மெல்ல மெல்ல ஊதுபத்தி மணம் போல் அலை அலையாய் வந்து உடலெல்லாம் பரவிற்று. பிறகு நின்றது.

அவசரமாக இறங்கிச் சென்றேன்.

"கல்யாணி!......"

கல்யாணி அந்த வீணையைக் கையிலேந்தி அமர்ந்தபடி அசையாமல் சிலையாய் இருந்தாள். விரல்கள் தந்திகளின் மேல் நின்றபடி இருந்தன.

"என்ன கல்யாணி?"

"என்னவோ பயமாக இருக்கிறது...."

"என்ன பயம்?"

"வீணையை எடுத்து வைத்துக் கொண்டேன். யாரோ பக்கத்தில் வந்து உட்கார்ந்த மாதிரி இருந்தது. திரும்பினால் யாரும் இல்லை......."

"அதெல்லாம் வெறும் பிரமை. பயப்படாமல் இரு. நான் இங்கேயே இருக்கிறேன்."

பிறகு அவள் சற்று நேரம் அமைதியாக, கானடா ராகமும், ஹிந்தோள ராகமும் வாசித்தாள். அந்தச் சுத்த சங்கீதத்தில் நான் லயித்துப் போதையில் ஆழ்ந்தேன். நேரம் போனதே தெரியவில்லை. கமாஸ் ராகம் வாசிக்கும்போது என்னுடைய கண்ணிமைகள் மூடி, கரகரவென்று கண்ணீர் கொட்டிற்று. நானே விம்மினேன்.......

## 2

கல்யாணியைப் பற்றி நான் நினைக்கக் கூடிய வாய்ப்பெல்லாம் எனக்குத் திடீரென்று வந்துவிட்டது. மாமியின் திடீர் மறைவு தந்த அதிர்ச்சியில் மெல்ல மெல்ல நான் மீண்டு வரும்போது செல்லக் குழந்தையாய் வளர்ந்த அருமைக் கல்யாணியின் நினைவுகள் என் மனத்தைப் பிடித்துக் கொண்டன. இது நாள் வரை நான் அவளோடு பேசத் துணிந்ததில்லை; அவசியமும் நேரவில்லை. ஒரே நேரத்தில் இருவருக்கும் இலை போட்டு மாமி பரிமாறியது உண்டு; விசாரித்ததும் உண்டு. ஆனால் கல்யாணியோடு நான் பேசியதும் இல்லை. அவளை நிமிர்ந்து பார்க்க எனக்குத் தைரியம் வந்ததும் இல்லை. நான் இந்த வீட்டில் பிறந்தவன் இல்லை. நான் இங்கே மாமியின் தயவால் வளர்கிறவன்.

மாமி, அந்தப் பாகுபாடு தெரியாமல்தான் என்னை வளர்த்தாள். ஆனால் என் பிறப்பை நான் என்றும் மறக்க முடியாது என்பதும் எனக்குச் சற்றும் உரிமையில்லாததை உரிமை கொண்டாடிவிட என் மனம் ஒப்புக் கொள்ளாது என்பதும் உண்மை.... மாமியின் செயல்களுக்கு அந்த வீட்டில் நான் நாயாய் நன்றி செலுத்த வேண்டும். பரம்பரை பரம்பரையாய் என் சந்ததிகள் அங்கே ஊழியம் புரிய வேண்டும். மௌனமாய்ச் சலனமற்று நிற்பதாய்த் தோன்றுகிற இந்தப் பிரம்மாண்டமான வீடும்; அங்கே தாயை இழந்து தனியாய் நிற்கின்ற கல்யாணியும், என் உதவிகளை எதிர்பார்த்து நிற்பதுபோல்

# கொளுத்தும் வெயிலில் குளிர்ச்சிமிக்க யோசனை




உற்சாகமூட்டும்
கோடைகால
பானம்



## ஐஸ் காபி

மிகமிகச் சுவை படைத்தது!
புத்துணர்வு ஊட்டுவதில்
நிகரற்றது

காபி போர்டு • பெங்களூர்

# காலைப் புத்துணர்ச்சியை மாலை வரை நீடிக்கச் செய்யுங்கள்!

காலையில் குளித்தபின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடலில் தூவிக் கொண்டால் புத்துணர்ச்சி மணிக்கணக்கில் நீடித்திருக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மையுடைய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் கடுங்கோடையில் கூட உங்களை இதமான உணர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் இருக்கச்செய்யும். உங்கள் உடலைத்தழுவி நிற்கும் ட்ரீம்ஃப்ளவர் நறுமணம் உங்களைச் சூழ்ந்துள்ளவர்களை மகிழ வைக்கும். எல்லா காலநிலைகளுக்கும் ஏற்றதாகையால் வருடம் பூராவும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்!




## பாண்ட்ஸ்

**ட்ரீம்ஃப்ளவர் டால்க்—**
**மென்மை மிக்க மகோன்னத டால்க்!**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

P-6986

எனக்குத் தோன்றிக் கொண்டேயிருந்தது. நான் எதுவும் செய்வதற்குச் சித்தமாக இருந்தேன்.

கல்யாணியின் கண்கள் கலங்காமல் நான் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மாமியின் மறைவுக்குப் பிறகுதான் அவள் எவ்வளவு மாறி விட்டாள். எவ்வளவு ஏங்கிப் போய் விட்டாள்!.... இன்னும் குழந்தையாக அவள் இருக்கிறாளே!....

நான் அவளைத் தேற்ற வேண்டும். அம்மாவைப் பிரிந்த அந்தச் சோகம் கொஞ்சம் கொஞ்சமாய் அவளிடம் மறைய வேண்டும்.

மாமா என்றும் எதற்கும் வீட்டில் கூலி விட்டுக் கொண்டதில்லை. அப்படி வக்கீல் உத்தியோகத்தில் சம்பாதித்துச் சம்பாதித்து வேண்டியதற்கு மேல்தான் சேர்த்தாகிவிட்டதே! ஒரே பெண்தானே? இந்தச் சொத்துக்களைவிட இனி இன்னும் எதற்கு? மாமி இருக்கிற வரையிலாவது கல்யாணியைப் பற்றி அக்கறையில்லாமல் இருந்ததில் ஆச்சரியமில்லை. மாமி மறைந்ததும், தன்னந் தனியாய் நிற்கிற கல்யாணியைக் கவனிப்பதற்கும், விசாரிப்பதற்கும், ஆறுதல் சொல்வதற்கும் கொஞ்சம் அக்கறை செலுத்த வேண்டாமோ?.... அப்படி என்ன சம்பாத்தியம் வேண்டியிருக்கிறது?

சாப்பாட்டுக்கு உள்ளே வரும்போது மட்டும், குரலைக் குழைவாக்கிக் கொண்டு, ''என்னம்மா, கல்யாணி.... சாப்பிட்டியா?'' என்று ஒரு கேள்வி. அதோடு சரி.... தந்தை மகள் பாசம் அந்த விசாரணையோடு நின்று விடும். கவனித்துக் கொள்ளச் சமையல்காரி இருக்கிறாள், வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். வேண்டிய வசதிகள் இருக்கின்றன...... இப்படித்தான் நினைத்துக் கொள்வாரோ பெற்றவர்!

மாமி இப்பொழுதுகூட என் எதிரில் நிற்கிறாளோ என்னவோ? 'மாமி! நீங்கள் கவலைப்பட வேண்டாம். என்னை நீங்கள் ஆதரித்து வளர்த்தீர்கள். தெருவில் அநாதையாக நின்ற எனக்கு என் தகுதிக்கு மேல் இங்கே இடம் தந்தீர்கள். அதற்காக நான் எவ்வளவோ நன்றி செலுத்த வேண்டியவனாகிறேன். கல்யாணியைக் கண்ணுக்குக் கண்ணாய் நான் பார்த்துக் கொள்வேன். பெரிய இடத்தில் சிறந்த வரனுக்கு அவளைக் கல்யாணம் செய்து கொடுத்துச் சுகமாய் வாழ்வதை நீங்கள் ஆவி உருவில் கண்டு மகிழ்வீர்கள்.....

''சாப்பிட வாருங்களேன்....!''

திரும்பினேன். கல்யாணிதான் நின்றாள். எனக்கு வெகு அருகில் என் எதிரில், 'பளீ' ரென்று இடீர் மின்னலிட்டாற்போல் அவள் நின்றாள். மஞ்சள் வாசம் நெஞ்சை அள்ளிற்று. அவள் இதுவரையில் என்னை அப்படி அழைக்கும்படி என்னை வைத்துக் கொண்டதில்லை. நான் எதிர்பார்க்கவேயில்லை. அவள் அதுவரை என்னோடு வலுவில் வந்து பேசியதே இல்லை. நான் கேட்கிற கேள்விகளுக்கே அவள் பதில் சொன்னது இல்லை. அவள் நின்ற விதம், அழைத்த விதம், அன்பும் கருணையும் கலந்து குழைந்த அந்த இனிமை முற்றிலும் புதியதாய் இருந்தது. அந்த அழைப்பில் நழுவிய நாணமும், பக்தியும், பாசமும் மரியாதையும் எனக்கு எதற்குக் கண்ணே!.... நான் அதற்குத் தகுதியுள்ளவனா?.... பெற்றவர்கள் முகம் மறந்து, அநாதையாய், ஒரு வாய் உணவுக்கு ஏங்கி நின்ற நான் எங்கே? செல்வமும், சௌந்தர்யமும் அடிபணிந்து நின்று ஏவல் புரிகிற நீ எங்கே?

''இதோ வந்து விட்டேன், அப்பா வந்து விட்டாரா என்ன?'' என்று அவசரமாய் எழுந்தேன் நான்.

''அப்பா வரவில்லை. வருவதற்கு நேரமாகுமாம்.....!''

''சரி, நீ சாப்பிட்டாயிற்று?''

''ஊஹூம்......!''



அவள் எனக்கு முன்னால் மாடிப் படிகளில் இறங்கிச் சென்றாள். ஊஞ்சல் சங்கிலிப் பின்னல்கள் இரண்டும் என் முன்னால் ஆடி அசைகிற அந்த மோகனம் என் மனத்தை மயக்கிற்று. சற்று முன் என் எதிரில் அவள் நின்றவிதம், என் நினைவில் நின்றுகொண்டே இருந்தது. தேவி புவனேசுவரியின் பொற் சிலையைக் கனவில் கண்டு விழித்தது போல் உள்ளம் சிலிர்த்தேன்.

அவள் கொஞ்சம் கொஞ்சமாக மாறிக் கொண்டுதான் வருகிறாள். தாயை இழந்த சோகம் மெல்ல மெல்ல விலகி, மேகம் நீங்கிய நிலவைப் போல் அவள் தெளிவாய் உலவினாள். அந்த மலர் இதழ்களில் இலேசாய்ப் புன்னகை உதிர அவள் வீணையை எடுக்கிற அந்த நளினமே போதும்! அவள் கண் கொள்ளாமல்தான் இருந்தாள்.

சங்கீத அருவியில் இணைந்துக் கொண்டே நான் மானஸீகமாய்க் கதறுகிறேன்: என் இந்த நல்ல நிலைக்குக் காரணமாயிருந்த என் அன்னையிடம் நான் எப்படி நன்றி செலுத்துவேன்? எப்படிப் பிரதிசெய்து நன்றிக் கடன் தீர்ப்பேன்?

திடீரென்று அந்த சங்கீதம், நாக்கு அறு பட்ட மணி போல் நின்று போயிற்று. கண்களைத் திறந்து பார்த்தபோது நான் அதிர்ந்தேன். கல்யாணி வீணையும் கையு மாய் மூர்ச்சையாகிக் கிடந்தாள்.

''கல்யாணி! கல்யாணி!''

கல்யாணிக்கு என்ன நேர்ந்து விட்டது, ஈசுவரி.....!

''கல்யாணி! கல்யாணி!....''

அவளை நான் தொட்டேன். உடல் சிலிர்த்துச் சில்லிட்டுக் கிடந்தது. தாயே! இந்தக் குழந்தைக்கு என்ன நேர்ந்து விட்டது? வீணையில் வைத்த முகத்தை மெல்ல நிமிர்த்தி என் மடியில் வைத்துக் கொண்டபோது என் உடம்பெல்லாம் பதறிற்று. இதோ நகர்த்திய இந்த வீணையின் உருவில் மாமி இருப்பாளோ? மாமியின் கண்கள் கட்டெரிக்குமோ?.... அந்த வீணையில் மாமியின் முகத்தை நான் கண்டேன். அதில் நான் என்றும் கண்டிராத படி கோபக்கனல் வீசுகிறதே! ஐயோ!.... ஐயோ!.... போதும், போதும்.....!

என் மடியில் கல்யாணியின் மோகன எழில் தணலாய்த் தகித்தது.....

''கல்யாணி.... கல்யாணி!....''

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு அவள் முகம் சிவந்து கொண்டது. அவள் இமைகளை நீக்கி நிமிர்ந்து பார்த்தாள். என்னையறியாமல் என் கண்கள் இரண்டும் நீர் நிரம்பி என் பார்வையை மறைத்துவிட்டன. நான் அவசரமாய்க் கண்களைத் துடைப்பதற்குள் கண்ணீர் பெருகி அவள் முகத்தில் தெறித்தது. அவள் 'நறுக்'கென்று எழுந்து நின்றாள்.

''உனக்கு உடம்பு சரியாக இல்லை. போய் ஓய்வு எடுத்துக் கொள்.... கல்யாணி......!''

தள்ளாடியவளாய் அவள், ''சாப்பிட நாழியாகி விட்டது, வாருங்கள்!'' என்றாள்.

## 3

ஒவ்வொரு சமயம் எனக்கு அவளைப் பார்க்கவே விசித்திரமாக இருந்தது. அவள் எனக்காக ஏன் காத்துக் கொண்டு நிற்கிறாள் என்னை ஏன் எதிர்பார்க்கிறாள்? என்று புரியாமல் குழம்பினேன். என்னோடு அவளும் உட்கார்ந்து சாப்பிடாமல் எனக்காகக் காத்திருந்து தன் கையால் எனக்கு உணவு பரிமாற அவள் ஏன் விரும்புகிறாள்? என்னைக் கண்டதும் ஏன் அப்படி மரியாதையோடு எழுந்து நிற்கிறாள்? என் மனத்துக்குள்ளே அந்த வேதனையைத் தாங்கவே முடியவில்லை.

ஒரு நாள் பௌர்ணமி நிலவில், மேல் மாடியில் நான் நின்று கொண்டிருந்தபோது அவள் அருகில் வந்து நின்றாள். நான் வெகு நாட்களாய் அடக்கி வைத்துக் கொண்டிருந்த என் வேதனையை அவளிடம் சொல்லித் தீர்த்துவிட நினைத்தேன்.

''கல்யாணி! தூங்கவில்லையா?''

''ஊஹூம்......!''

''ஏன்?''

''.......... ...............''

''தூக்கம் வரவில்லையா ?''

''ஊக்கும்......!''

''உனக்கு உடம்பே சரியாக இல்லை. நான் அப்பாவிடம் சொல்லி....!''

ரோஜா மலர்வது போல் அவள் புன்னகை புரிந்தாள். அந்த நிலவொளியில் அந்தப் புன்னகையில் உலகமே மங்கிற்று.

''கல்யாணி! உன்னிடம் நான் கொஞ்சம் பேசட்டுமா?''

''..............''

''நான் வெகுநாட்களாகச் சொல்லவேண்டுமென்றிருக்கிறேன். சொல்லட்டுமா ?''

''உம்.''

''நான் யார் தெரியுமா கல்யாணி ?''

அவள் முகம் திடீரென்று மாறிப் போயிற்று.

''நான் ஓர் அநாதை. தாய் தந்தையரை இழந்து அரை வயிற்றுக்குக்கூட இல்லாமல் தெருவில் திரிந்தேன்.... மாமி என் மேல் இரக்கம் கொண்டு என்னைத் தம் பிள்ளையைப் போல் வளர்த்தார். நான் இந்தப் பட்டப் படிப்பெல்லாம் படிப்பேன் என்று கனவிலும் நினைக்கவில்லை.... கல்யாணி! இந்த உதவிக் கெல்லாம் நன்றி செலுத்துவது என்பதெல்லாம் முடியாத காரியம்.... பரம்பரை பரம்பரையாய் நாங்கள் உங்கள் வீட்டில் வந்து ஊதியம் பெறாமல் சேவகம் செய்ய வேண்டும். நீ என் எஜமானி. நான் உன் கட்டளைக்குக் காத்திருக்க வேண்டிய சேவகன்.''

அவள் பேசவேயில்லை.

''நீ நினைப்பதைப் போல் நான் எந்த விதத்திலும் உயர்ந்தவனில்லை. நீ எதற்காக எனக்கு இவ்வளவு மரியாதை செலுத்த வேண்டும்? எனக்காக எதற்குக் காத்திருக்க வேண்டும்? நான் உங்கள் குடும்பத்துக்கு எந்த விதத்திலும் பணி புரியத் தயாராக இருக்கிறேன். ஆனால் அதற்கு வகையில்லாமல் இருக்கிறது. மாமியின் மனம் எப்படியோ அப்படி நான் நடந்து கொள்ளவேண்டும். மாமி உன் கலியாணத்தைப் பற்றி என்ன கனவு கண்டாரோ, அதை நான் நிறைவேற்றி வைக்க வேண்டும். உன் அழகுக்கும், அந்தஸ்துக்கும், குணத்துக்கும் இணையான ஒரு வர

# சிறிய மாதத் தவணைகளில் சேமித்து பெரிய பொருள்களை

# வாங்கிக் கொள்ளுங்கள்

# -பாங்க் ஆ∴ப் பரோடாவின் ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்தில் சேருங்கள்!





மாதம் ரூ. 5/-வீதம் செலுத்திவந்தால் 24 மாதங்களில் ரூ.127.50 கிடைக்கும்—ஒரு டேபிள் ∴பான் வாங்கிக் கொள்ளலாம்' மாதம் ரூ. 10/-வீதம் 36 மாதங்களில் ரூ.395/-சேரும்—இது நல்லதொரு சைக்கிள் வாங்கப் போதுமானது.

எனவே, விலையுயர்ந்த பெரிய பொருள்களை வாங்கிக்கொள்ள, பாங்க் ஆ∴ப் பரோடாவின் ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்தில் சேருங்கள். சுலபமான மாதத் தவணைகளில் பணத்தைக் கட்டி, சேமித்துக் கொண்டே கணிசமான வட்டியையும் சம்பாதிக்கலாம்!

ஏற்றுக்கொள்ளப்படும் மாதத் தவணைகளின் தொகை: ரூ.5, ரூ.10, ரூ.20...ரூ.100 வரை. 2, 3, 4-முதல் 9 வருடங்கள் வரை.

| மாதத் தவணை | 2-வருடக் கணக்கு | 3-வருடக் கணக்கு | 4-வருடக் கணக்கு | 5-வருடக் கணக்கு | 7-வருடக் கணக்கு | 9-வருடக் கணக்கு |
|---|---|---|---|---|---|---|
| ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 5 | 127.50 | 197.50 | 271.50 | 354.50 | 536 | 750 |
| 10 | 255 | 395 | 543 | 709 | 1,072 | 1,500 |
| 20 | 510 | 790 | 1,086 | 1,418 | 2,144 | 3,000 |
| 30 | 765 | 1,185 | 1,629 | 2,127 | 3,216 | 4,500 |
| 40 | 1,020 | 1,580 | 2,172 | 2,836 | 4,288 | 6,000 |
| 50 | 1,275 | 1,975 | 2,715 | 3,545 | 5,360 | 7,500 |
| 60 | 1,530 | 2,370 | 3,258 | 4,254 | 6,432 | 9,000 |
| 70 | 1,785 | 2,765 | 3,801 | 4,963 | 7,504 | 10,500 |
| 80 | 2,040 | 3,160 | 4,344 | 5,672 | 8,576 | 12,000 |
| 90 | 2,295 | 3,555 | 4,887 | 6,381 | 9,648 | 13,500 |
| 100 | 2,550 | 3,950 | 5,430 | 7,090 | 10,720 | 15,000 |
| | வருடம் 5¾% | வருடம் 6% | வருடம் 6% | வருடம் 6½% | வருடம் 6¾% | வருடம் 7% |

(ஆறு மாதங்களுக்கொரு முறை கூட்டுவட்டி கணக்கிடப்படுகிறது)

என்றென்றும் வளமையுடன் வாழ உங்களுக்கு உதவுகிறது—

## தி பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்

நிறுவனம்: (1908) ரெஜிஸ்டர்ட் ஆபீஸ்: மாண்ட்வி, பரோடா
இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் 300க்கு மேற்பட்ட கிளைகள் உள்ளன

உங்களுக்கு அருகாமையிலுள்ள கிளையிலிருந்தோ, எழுதிக்கேட்டோ, எமது ரெக்கரிங் டெபாஸிட் திட்டம் பற்றிய பிரசுரத்தை இலவசமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்.

Shilpi

## அவர் செயல்!

'பெரிய மனிதர்'
எனவே சிலரும்
பேசப் பெறுவதேதனால்? - அவர்,
அரிய செயலாய்
அற்பத் தனங்களும்
ஆம்தனுக் காய்ச்செய் வதனால்!

தமிழழகன்



லைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும்......''

கல்யாணியின் முகம் சரியாகத் தெரியவில்லை. மேகம் வந்து நிலவை மறைத்திருந்தது.

ஆனால் அவள் கண்கள் பளபளக்கிறதை நான் கவனிக்க முடிந்தது.

''கல்யாணி! நான் உற்றார் உறவினரை இழந்த அநாதை... வேலை தேடிச் சென்று இனிமேல்தான் ஊதியம் பெற வேண்டும். நான் எத்தனையோ நன்றிக் கடன்கள் செலுத்த வேண்டியவன். உன் நிலைமை அப்படி இல்லை. நீ செல்லக் குழந்தையாக வளர்ந்தவள். விரும்பினால் ஆயிரம் பேர்கள் அடிபணிந்து நிற்பார்கள். நான் அநாதை..''

அவள் பதிலே பேசவில்லை. அந்த விசித்திர மௌனமே என்னை வாட்டி வதைத்தது. என் மனத்தில் எழுகிற எண்ணங்களை, பயங்களை, கலவரங்களை அவளிடம் என்றாவது ஒரு நாள் சொல்லித்தானே ஆக வேண்டும்? நான் சொல்லாமல், தடுத்து நிறுத்தாமல் இருந்தால், துரோகம் செய்தவனாக ஆகிவிடுவேனோ? உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்தவனாக ஆகிவிடுவேனோ? நிற்க நிழல் தந்தவர்களின் சொத்தைக் கொள்ளையிட்டவனாக ஆகிவிடுவேனோ?....

கல்யாணி வாய் திறந்து நாலு வார்த்தைகள் சொன்னால் சற்று ஆறுதலாக இருக்கும் போலத் தோன்றிற்று. ''கல்யாணி! வாயைத் திறந்து எதையாவது சொல்லேன்!'' என்று கெஞ்ச வேண்டும் போல் இருந்தது.

''கல்யாணி! நான் சோம்பேறியாக இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறேனே என்று அடிக்கடி தோன்றுகிறது. நான் வேலை தேடிச் சென்று பணம் சம்பாதித்துக் கொண்டு வந்து அதையெல்லாம் உன் காலடியில் கொண்டு வந்து ஒரு நாள் வைக்க வேண்டும். நீ இட்ட வேலைகளை நான் செய்ய வேண்டும். என் உயிர் உள்ளவரையில் உனக்கு எது வேண்டுமோ அதை நான் கட்டளையாக ஏற்று நடத்தி வைக்கவேண்டும். இங்கிருந்து நான் போய்விட வேண்டும் போல ஒவ்வொரு சமயம் தோன்றுகிறது. ஒவ்வொரு சமயம் உன்னை ஒரு கணம் பிரியாமல் மாமிக்கு இணையாக நான் இருந்து, உன்னைக் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பையும் உணர்கிறேன். எனக்கு எதுவும் புரியவில்லை. நான் ஏழை... நான் அநாதை.....!

கல்யாணி நறுக்கென்று நகர்ந்து மாடிப் படிகளில் இறங்கிச் சென்றாள். என் உடல் வெகு நேரம் பதறிக் கொண்டிருந்தது. நான் கலங்கிப் போனேன்.....

### 4

நான் சொன்னது கனவிலா, நனவிலா என்று எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது. ஏனெனில், கல்யாணி பதில் பேசாதது மட்டுமல்ல, அதைக் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை. அவள் மாறவே இல்லை. அவள் எனக்காகக் காத்து நிற்பதையும், மரியாதையோடு வந்து அழைப்பதையும் மாற்றிக் கொள்ளவில்லை. அவள் என் வார்த்தைகளுக்குச் செவிடாய், ஊமையாய் என் கவலைகளுக்குக் கல்லாய் நின்றாள்.

ஒருநாள் அவளிடம் ''என்னிடம் பேச என்ன தயக்கம்? நான் உன் உடன்பிறக்காத சகோதரன்தானே கல்யாணி? மாமி எத்தனை தடவை சொல்லியிருக்கிறார்?'' என்று கேட்டேன்.

அவள் முகம் இடீரென்று ஒரே கணத்தில் வாடி விழுகிற மலர்போல் ஆயிற்று. மூடிய இமைகளில் கண்ணீர் முத்துக்களை நான் கண்டேன். அவள் அப்படியே நின்ற இடத்தில் நிலைபெயர்ந்து சாய்ந்தாள். நான் அதிர்ந்து போய்க் கீழே சாய்கிறவளை அப்படியே கைகளில் தாங்கிக் கொண்டேன். பூமாலையைத் தாங்குவது போல் அவளைத் தாங்கி வந்து கட்டிலில் கிடத்தினேன். ★

''கல்யாணி! கல்யாணி....!'' — நான் பதறினேன்.

இமைகளைத் திறக்காமல் எழுந்து இடீரென்று என் தோளைத் தொட்டாள்.

''உனக்கு என்ன? ஏன் இப்படி....? என்ன வேண்டும்?''

''நீங்கள்தான் வேண்டும்.''

ஓராயிரம் மின்னல்கள் என்முன் நட்சத்திரப் பொறிகளை வாரி இறைத்தன. என் நெஞ்சைத் துக்கம் வந்து அடைத்துக் கொண்டது. **(அடுத்த இதழில் முடியும்)**

★ இந்நிகழ்ச்சியையே அட்டைப்பட ஓவியமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் ''கல்பனா.''

## மறுபடியும் கவனியுங்கள்...
## இது புதியதோர்
## நவீனத் தோற்றம்!



ஒரு இனிய இளமை மோஸ்தருடன்
மென்மையும் பெண்மையும் கொண்டது.
பாடா நவீனு மிகக் குளுமைச் சுகம் அளிக்க
வென்று அழகாக உருவாக்கப்பட்டிருக்கிறது.
குதியங்காலும் உள் பாதமும் மெதுவாகக்
குழிச் செல்லும் வகையிலும் விரல்கள்
சுலபமாகப் பொருந்துவதற்கு அகன்றவாறும்
லாஸ்டினுள் அமையப் பெற்றுள்ளது. பற்பல
வண்ணங்களிலே நீடித்துழைக்கின்ற வளைந்து
கொடுக்கும் மேல் தோற்பட்டைகள்
கொண்டவை. விசேஷமான இப்புதிய சிறிய
குதியங்காலைப் பாருங்கள். அடிப்பாகத்தின்
அமைப்பு காலடியுடன் நன்கு பொருந்தி,
நடக்கும்போது இன்ப உணர்ச்சி பெறச் செய்கிறது!



சவிதா 12.50



**Bata**

# நவீனு

காலுக்கடியில் ஓர் புத்துணர்ச்சி



பவிதா 12.50

ஸரிதா 12.50


நல்ல காலம்! அதோ ஒரு போலீஸ் காரர் வரார்!

ஏன் துக்கம் ஒரு பந்து போல் உருண்டு நெஞ்சக் குழியில் வந்து அடைத்துக் கொண்டது. அது வரையில் கலங்கி யிருந்த என் கண்கள், கோபம் துக்கமாக மாறி நெஞ்சு வரை வந்த பிறகு, இரண்டு கண்ணீர் முத்துக்களைப் 'பொட்'டென்று உதிர்த்தது. ''நான் ஏன் இப்படி இருக்கிறேன்? கோபமோ, துக்கமோ, எது வந்தாலும், கண்ணில் எதற்காக நீர் வர வேண்டும்? இதுதான் என் பலவீனமா? சே!'' என்று நொந்து கொண்டு கன்னத்தில் படிந்த நீரை வழித்துக் கண்டினேன்.

''ராதி! என்ன பேச்சைக் காணோம்? இன்னுமா நீ அதே நினைவாயிருக்கிறாய்?'' என்று கேட்ட என் கணவர் ஒரு கையால் 'ஸ்டீயரிங் வீலை'ப் பிடித்துக் கொண்டே மறு கையால் என் முகத்தைத் திருப்பினார். என் விழிகளில் கண்ணீரைக் கண்டு சட்டென்று காரைப் பாதையின் ஓரத்தில் வளைத்து நிறுத்தினார்.

''என்ன ராதி! என்ன இது? யாரோ வேலை இல்லாதவர் எதுவோ உளறினால் அதை இவ்வளவு பெரிதாக எடுத்துக் கொள்வதா? ம், என்ன குழந்தைத்தனம் இது? எங்கே, என்னைப் பாரு; கண்ணைத் துடைத்துக்கோ!'' என்றார்.

என் வருத்தம் உள்ளிருந்து வாய் வழியாக வெடித்தது.

''ம், ம். நீங்க சொல்லுவேள்! உங்களுக்கு என்ன? அவா உங்ககிட்டேயா வந்து கேட்கறா? உங்களையா சொல்றா? 'ஏண்டி! சுத்த அசடாயிருக்கியே! ஒரு டாக்டர் கிட்டே காண்பிக்கக் கூடாதோ?'ன்னு நாலு பேர் நடுவில் உறைக்கிற மாதிரி கேட்கறா?''

என் குரல் கரகரத்து விம்மலாக மாறியது. ''அசட்டுப் பெண்!'' என்று கூறியவர் நடுச் சாலையில் இருப்பதையும் மறந்து என்னை அணைத்துக் கொண்டார். அவர் எப்பொழுதுமே அப்படித்தான். அவருக்குத் தெரியும், அந்த அணைப்பு எனக்கு எந்த நிலையிலும் ஆறுதல் தரும் என்று.

''என்னைச் சொன்னால்தான் எனக்கா, ராதி? உன்னைச் சொன்னால் அது எனக்கில்லையா? ஆனாலும், இந்த மாதிரி வயசில் பெரியவா, விவேகம் இல்லாமல் பேசினால் அதைப் பெரிசா எடுத்துக்கப்படாது. விட்டுடணும். அப்பத்தான் இந்த உலகில் ஈடு கொடுக்க முடியும்'' என்றவர், சட்டென்று பேச்சை மாற்றி, ''ஏன் ராதிகா! 'ப்ளூ டைமண்டி'ல் நல்ல படம் ஓடறது. மெயின் பிக்சர் ஏழு நாற்பத்தைந்துக்குத் தான் ஆரம்பம். இப்போ ஏழரைதான் ஆகிறது. நாம் நேரே அங்கே போகலாமா?'' என்று கேட்டார். அடுத்த கணமே காரை 'ஸ்டார்ட்'டும் செய்தார்.

# அவர்கள் பேசட்டும்!



சிவசங்கரி சந்திரசேகரன்

நான் பதில் பேசவில்லை. அவர் கண்டிப்பாகத் தியேட்டருக்குத்தான் ஓட்டுவார் என்பது எனக்குத் தெரியும். எப்போதுமே அவர் அப்படித்தான். நான் எப்போது எந்த மாதிரி மன நிலையில் இருக்கிறேன்? நொந்து கிடக்கும் என் மனத்தை எப்படித் திருப்பவேண்டும் என்பதெல்லாம் அவருக்கு அத்துப்படி.

கண்களை இறுக மூடிக்கொண்டு கார்ஸீட்டில் சாய்ந்தேன். 'அவள் எப்படிச் சொல்லலாம்? எந்த சுவாதீனத்தில் கூறலாம்? எப்படி, எப்படி?' இதுவே என்னுடைய மனத்தைக் குடைந்தது. கண்ணுக்குள் பழைய நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாக நிழலாடின.

அம்மா! நாள்தான் எவ்வளவு வேகமாக ஓடுகிறது! எனக்குக் கல்யாணமாகி ஐந்து வருடங்கள் ஓடி விட்டன. நம்பத்தான் முடியவில்லை! எனக்கு நன்றாக நினைவிருக்கிறது.

இயாகு பிரிட்டனிலிருந்து திரும்பி வந்தது, விமான நிலையத்

தில் என்னைப் பார்த்த பொழுது, ''இந்தப் பெண் யாரு?' என்று கேட்டது. பிறகு கல்யாணப் பேச்சு நடந்தது. எல்லாம்! கல்யாண தினத்தன்றுகூட எல்லோரும் என்னை எப்படியெல்லாம் கேலி செய்தார்கள்!




எங்கள் கல்யாணத்தைக் காதல் கல்யாணம் என்றுகூடப் பேசிக் கொண்டார்கள். சிறு வயது முதல் தெரிந்த குடும்பங்கள் தான் என்றாலும் மனத்தால் கூட நாங்கள் வேறுவிதமாக நினைத்துப் பழகவில்லை. பெரியவர்களாகவே பார்த்து எங்களுக்கு முடி போட்டதுதான். ஒன்பது வயது வித்தியாசத்தைக்கூட மறந்து எங்களுக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். ஆதி யோடு அந்தம் தெரிந்தவர்களே, 'ராது, இது நிச்சயம் காதல் கல்யாணம் தானே?' என்றால் எனக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்? இவரிடம் சொன்னபோது சிரித்தார். என் முகத்தை ஒரு விரலால் தூக்கி, ''சொல்லட்டுமே. ராதி, நமக்குத்தான் கல்யாணம் ஆகிவிட்டதே! இனி மேல் என்ன பேசினால் என்ன? பேசிவிட்டுப் போகட்டும்'' என்றார். பேசட்டும் என்று நானும் விட்டு விட்டேன். திருமணமாகி இரண்டு வருஷங்கள் வரை ஒருவரும் எதுவும் பேசத்தான் இல்லையோ, அல்லது என் காதுகளுக்குத்தான் எட்டவில்லையோ? அந்த வருஷம் நவராத்திரிக்காக நான் சென்னைக்கு மாமியார் வீட்டுக்கு வந்திருந்தேன்.

எங்கள் வீட்டுக் கொலுவுக்கு அன்று நிறையப் பேர் வந்திருந்தார்கள். உறவுக்கார மாமியாம் ஒருத்தி, நானும் மாமியாரும் தனியாக நின்று கொண்டிருந்த போது அருகில் வந்து, 'சடக்' கென்று கேட்டுவிட்டாள், ''என்ன மன்னி! உன் மாட்டுப் பெண்ணுடன் வந்தவள்தான் என் மாட்டுப் பெண்ணும்! என் பேரனுக்கு இப்பொழுது ஆறு மாசம் ஆகிறதே! ஏன் உன் மாட்டுப் பெண்ணை இப்படி இருக்கச் சொல்கிறாய்?'' என்று.

எனக்குத் திடுக்கிட்டது. ஏன், மாமியாருக்குத்தான்! ''யாரோ வருகிறார்கள். நீ போய்ப் பாரம்மா!'' என்று என்னை அனுப்பி விட்டார்கள். அந்த

மாமியிடம் என்ன சொன்னார்களோ, எனக்குத் தெரியாது. அப்புறம் பார்த்தபொழுது அவர் கண்கள் கலங்கியிருந்தன.

ஒரு வருடம் கழித்து இவருக்கு வடக்கேயிருந்து சென்னைக்கே மாற்றலாகி விட்டது. அதன் பிறகுதான் எத்தனை பேச்சுக்கள் எழுந்தன!

ஏப்ரல் மாசம் என்று நினைக்கிறேன். என் சித்தி வீட்டில் அன்றைக்கு வளைகாப்பு. முதல் நாளே வந்து என் மாமியாரிடம் 'ராதிகாதான் மறு மனை அடுக்கிக்கொள்ள வேண்டும்' என்று அழைத்து விட்டுப் போனாள். எனக்கு 'மறுமனை' என்றால் என்னவென்று தெரியாது. மறு நாள்தான் தெரிந்தது. 'பிள்ளை உண்டாகாத பெண்ணுக்கு, அன்றைக்கு வளை அடுக்கும் பிள்ளைத் தாய்ச்சிக்கு அடுத்தபடி 'மறுமனை' அடுக்கினால், உடனே பிள்ளையாண்டு விடுவாள்!' என்று. மனையில் உட்கார்ந்திருந்த போது அருகில் இருந்தவர்கள் செய்த கேலியும் பேசிய பேச்சும் என்னை முள்ளாய்க் குத்தின. இருந்தாலும் ஏதோ பெரிய குறை உள்ளவள் போல் குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருந்தேன். பேசத் தனிமை கிடைத்த பொழுது என் தியாகுவிடம் சொன்னேன்.

இவர் மறு நாள் தம் தாயிடம் சொல்லி விட்டார். ''அம்மா, ராது வெட்கப்படுகிறாள், இனி யார் வீட்டுக்கும் இந்த மாதிரி அனுப்பாதே'' என்று. என் மாமியாரும் ஒரு குணக் குன்று. இல்லாவிட்டால் ''வாஸ்தவம் தான், தியாகு! இந்தப் பெண்ணின் மன சௌக்யத்தைவிட நமக்கு வேறு என்னப்பா முக்கியம்?'' என்று சொல்லி யிருப்பாரா?

எவ்வளவோ பட்டுக் கொள்ளாமல் இருந்தாலும் ஒரு நாள் நான் வகையாக மாட்டிக் கொள்ளத்தான் செய்தேன். மாமியார் என் நாத்தனாருடைய பிரசவத்துக்காகப் பூனாவுக்குச் சென்றிருந்தார். வீட்டில் நாங்கள் தான் இருந்தோம். அதே சித்தி பெண்ணுக்குக் குழந்தை பிறந்து அன்றைக்குக் காப்பாம். எங்களை அழைத்திருந்தார்கள். அப்படி நடக்கும் என்று தெரிந்திருந்தால் நான் போயிருந்திருக்கவே மாட்டேன்! என்ன நடந்தது, தெரியுமா? எல்லா உறவுக்காரர்களும் வந்திருந்தார்கள். காப்புப் போட வேண்டிய நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. 'குழந்தையைக் குளிப்பாட்ட வேண்டும், ராதிகாவைக் கூப்பிடுங்கள்!' என்று யாரோ சொன்னார்கள். ''ராதி குழந்தையைக் குளிப்பாட்டப் போகிறாளாம், வாருங்கள், வாருங்கள்.'' பரபரப்பான அழைப்பைக் கேட்டு எல்லோருமே கூடி விட்டனர்.

''வா, ராதி!'' என்று சித்தி அழைத்த போதுகூட, 'நம்மை ஏன் குழந்தையைக் குளிப்பாட்டச் சொல்கிறார்கள்?' என்று நினைத்தேன். உள் மனசு மட்டும் ஏதோ எனக்குப் பிடிக்காத காரியம் ஒன்று நடக்கப் போவதாக அறிவுறுத்தியது. என்னைக் கோலம் போட்ட மனையில் உட்காரச் சொன்னார்கள். வேறு வழியில்லாமல் உட்கார்ந்தேன். வீட்டு ஆண்கள்கூட வேடிக்கை பார்க்க வந்து விட்டார்கள்.

''இந்தா, ராதி! குழந்தையை வாங்கிக் கொள்! நன்றாகத் தேய்த்துக் குளிப்பாட்டி விட்டு உடனே துடைத்துவிடு. இல்லாவிட்டால் குழந்தைக்கு ஜலதோஷம் பிடித்து விடும்'' என்று சொன்னபடியே பெரியம்மா, ஒரு துணி மூட்டையை என் கையில் கொடுத்தார். துணியில் என்ன இருந்தது, தெரியுமா? ஓர் அம்மிக் குழவி! ஆமாம், அதுதான் சம்பிரதாயம்! நான் குழவியை அத்தனை பேர் முன்னிலையில் குளிப்பாட்டினால் எனக்குக் குழந்தை பிறக்குமாம். எப்படி?

'ஈசுவரா!' என் கைகள் கனத்தால் வலித்தன, மனமோ 'ஓ'வென்று துடித்து அழுதது. 'சுருக்க ஆகட்டும் ராது! இதைக் குளிப்பாட்டும் வேளை, அடுத்த வருஷம் உன் கையில் குழந்தை தவழ வேண்டும்!'' என்று பல குரல்கள் என் காதில் விழுந்தன. வெறித்த பார்வையோடு தலையை நிமிர்த்தினேன். அவர் முகம் கூடத்தில் தெரிந்தது. என் நெஞ்சின் வேதனை அங்கேயும் பிரதிபலிக்கக் கண்டேன். அடுத்த கணம், கூட்டத்தை விலக்கிக் கொண்டு அவர் என் அருகே வந்தார். குழவியை வாங்கி அமைதியாகக் கீழே வைத்தார். ''என்னடாப்பா, தியாகு! ஒண்ணுமில்லாத விஷயத்தைப் போய்க் கணவனும், பெண்டாட்டியுமாகப் பெரிசுபடுத்தறேளே! ஏதோ விளையாட்டுக் காகச் செய்யலாம் என்றால்......'' என்று நீட்டி முழக்கிய பெரிய பாட்டியை ஒரு முறை முறைத்தார். பிறகு, ''வா, ராது! வீட்டுக்குப் போகலாம்'' என்று அழைத்துக் கொண்டு வந்து விட்டார்.

அன்றிலிருந்து அவருக்குப் 'பெண்டாட்டி தாஸன்' என்று பட்டம் சூட்டிவிட்டார்கள். அதை அவர் பொருட்படுத்தவில்லை.

அதன் பிறகு நாங்கள் ஒருவர் வீட்டு விழாவுக்கும் அதிகமாகப் போவதில்லை. போனாலும் தலையைக் காட்டிவிட்டுத் திரும்பி விடுவோம்.

அன்றோடு எங்களுக்குத் திருமணமாகி ஐந்து வருடங்கள் முடிந்து விட்டன. காலையில் எழுந்தவுடன் இவர் என் விரலைப் பிரித்து, ஓர் ஒற்றைக் கல் சிவப்பு மோதிரத்தை அணிவித்தவர், ''ஐந்து வருடங்கள் போனதே தெரியவில்லை ராது, இனியும் இந்த மாதிரிப் புதுமண உணர்வோடேயே நாம் இருப்போம்னு நம்பறேன்'' என்றார்.

''நானும் அதையேதான் சொல்ல வந்தேன்!'' என்று கூறிய நான் நாணித் தலை குனிந்தேன்.

இன்பமாகக் கழிந்தது பகல் பொழுது. அன்று மாலை ஒரு நண்பர் வீட்டுக் கல்யாண வரவேற்புக்குப் போக வேண்டியிருந்தது. அம்மா புதிதாக வாங்கியிருந்த சிவப்புப் பட்டுப் புடவையை உடுத்திக்கொண்டு அவரோடு புறப்பட்டேன். அங்கு அவருக்கு ஏராளமான நண்பர்கள் வந்திருந்தார்கள். பத்துப் பேர்கள் அமரும் மேஜையொன்றில் நாங்களும் இன்னும் சில நண்பர்களுமாக அமர்ந்து சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தோம். அப்பொழுதுதான் அது திரும்பவும் நிகழ்ந்தது! எங்கள் குடும்பத்துக்கு வேண்டிய ஓர் அம்

மிகவும் மிருதுவாக முகக்ஷவரம்
செய்து கொள்வதற்கென
'இரு முறை தீட்டப்பட்டது'

• சேவிங் பொருத்திய உடைவதில்லை

• நீடித்து உழைக்கிறது




**ZENiTH SPECIAL BLADE**

**பிரமாதமான முகக்ஷவரத்திற்கு எப்பொழுதும் ஜெனித் பிளேடுகளையே உபயோகியுங்கள்**

ஜெனித் ரேஸர் அண்ட் பிளேடு கோ. ப்ரை. லிட்.

hrb/104 tm

---

நீங்கள் இதை
ஒரு "அற்புதமான
பானம்" என்று
கூறுவீர்கள்
புதிய டிப்ஸ்



**டிப்ஸ்**

ஒரு ஒரு டிப்ஸ் டாப்லெட்டை ஒரு கிளாஸ் குளிர்ந்த தண்ணீரில் போடுங்கள். சில நிமிடங்களில் ருசியான பானம் உங்களுக்குத் தயாராக கிடைக்கும்.

• ஆரஞ்சு • பைன் ஆப்பிள் • ராஸ்ப்பெரி • மேங்கோ • கோலா • லெமன் • ரோஸ்

தயாரிப்பாளர்கள்:
டிப்ஸ் ப்ராடெக்ட்ஸ், டாகோர், (குஜராத்) பாரத்

---

தொலை பேசி எண் : 76103 த. பெ. எண் : 2910 தந்தி : செந்தில்

# தி இந்தோ மெர்கண்டைல் பண்ட் பிரைவேட் லிட்.

(ரிஜிஸ்டர்ட் : இந்தியன் கம்பெனி சட்டம் 1956க்கு உட்பட்டது)

25, கந்தரேஸ்வரர் தெரு மயிலாப்பூர், சென்னை - 4

கீழ்க்காணும் சீட்டு குருப்புகளுக்கு, 1961-ம் வருடத்திய 24-ம் நம்பர் மதராஸ் சிட்டு பண்டுகள் சட்டத்தின் கீழ் நாங்கள் சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொள்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். ஏலத் தேதிகள் உரிய காலத்தில் அறிவிக்கப்படும்.

| | வகுப்பு | சீரிஸ் | சீட்டுத் தொகை | மாதத் தவணை | டிக்கெட்டுகள் எண்ணிக்கை | மொத்த காலம் |
|---|---|---|---|---|---|---|
| தினசரி சீட்டு | சீட்டு நெ. | A | ரூ. 9,000 | ரூ. 20 தினசரி | 30 | 450 நாட்கள் |
| ,, | ,, | B | ரூ. 4,500 | ரூ. 10 ,, | 30 | 450 ,, |
| ,, | ,, | C | ரூ. 2,000 | ரூ. 5 ,, | 40 | 400 ,, |
| ,, | ,, | D | ரூ. 800 | ரூ. 2 ,, | 40 | 400 ,, |
| ,, | ,, | E | ரூ. 400 | ரூ. 1 ,, | 40 | 400 ,, |
| மாதாந்திர S.T. | ,, | A | ரூ. 6,000 | ரூ. 200 மாதத்துக்கு | 30 | 30 மாதங்கள் |
| ,, | ,, | B | ரூ. 3,000 | ரூ. 100 ,, | 30 | 30 ,, |
| ,, | ,, | C | ரூ. 1,500 | ரூ. 50 ,, | 30 | 30 ,, |
| ,, | ,, | D | ரூ. 750 | ரூ. 25 ,, | 30 | 30 ,, |
| ,, | ,, | E | ரூ. 600 | ரூ. 20 ,, | 30 | 30 ,, |
| ,, | ,, | F | ரூ. 450 | ரூ. 15 ,, | 30 | 30 ,, |
| மாதாந்திர L.T. | ,, | A | ரூ. 30,000 | ரூ. 500 மாதத்துக்கு | 60 | 60 மாதங்கள் |
| ,, | ,, | B | ரூ. 15,000 | ரூ. 250 ,, | 60 | 60 ,, |
| ,, | ,, | C | ரூ. 7,500 | ரூ. 125 ,, | 60 | 60 ,, |
| ,, | ,, | D | ரூ. 3,600 | ரூ. 60 ,, | 60 | 60 ,, |
| ,, | ,, | E | ரூ. 1,800 | ரூ. 30 ,, | 60 | 60 ,, |
| ,, | ,, | F | ரூ. 1,200 | ரூ. 20 ,, | 60 | 60 ,, |

**இந்தோ மெர்கண்டைல் மூலம் சேமித்து பலன் அடையுங்கள்**

கிளை: 1, ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்-1
தொலைபேசி எண் : 21941 த.பெ. எண் : 1524

M. V. சுப்ரமணியம்
மேனேஜிங் டைரக்டர்

மாள் — ஏறக்குறைய ஐம்பது வயது இருக்கும்- எங்களைக் கண்டதும் அருகில் வந்தார்.

"தியாகு, ராதி! என்ன அதிசயம்! இன்னிக்குத் தேதி பதினொன்று இல்லையா? நானே உங்களுக்குப் போன் செய்யணும்னு நினைச்சேன்! உங்களுக்கு என் வாழ்த்துக்கள்!" என்றவள், அதோடு போயிருக்கக் கூடாதா? தன்னை எங்களுக்கு ரொம்ப வேண்டியவராக நினைத்துக் கொண்டு, "ராதிகா! ஆனாலும் நீ ரொம்ப மோசம்! ஐந்து வருஷங்களாக நீ தியாகுவை ஏமாத்தறே! அடுத்த வருஷம் இந்த நாளைக்குள்ளே விளையாட இவன் கையிலே ஒரு குழந்தையைக் கொடுக்கலை. எனக்குக் கெட்ட கோபம் வரும்!" என்று கடிந்துகொண்டாள். நான் என் தியாகுவை ஏமாற்றுகிறேனாம். எப்படி இருக்கிறது? நான் பதறிப் போனேன். என் கணவரைத் தந்தையாகவும், என்னைத் தாயாகவும் ஆக்கிக் கொள்ள நான் உருகுவது இவர்களுக்கு என்ன தெரியும்? பின் ஏன் இவர்கள் இப்படிப் பேசுகிறார்கள்? படித்தவர்கள், படிக்காதவர்கள் எல்லோருக்குமே இந்த விஷயத்தில் மட்டும் விவேகமே போய்விடுமா? என்னை 'டாக்டரைப் பார்' என்று பலர் நடுவில் சொல்கிறார்களே! ஒரு டாக்டர் என்ன, ஒன்பது டாக்டர்களைப் பார்த்தோம். எங்களிடம் ஒரு குறையும் இல்லை என்பதைச் சொன்னாலாவது நம்புவார்களா? 'வேளை' என்ற ஒன்று வராததே குறை என்பதை யாவது புரிந்து கொள்வார்களா? இல்லை. நான் வரிசையாகப் பெற்றுத் தந்தால் இவர்கள் எடுத்து வளர்ப்பார்களா? பின் ஏன் இப்படிப் பேசிப் பேசி என்னை, இல்லை, இல்லை, என்னைப் போன்ற எத்தனையோ பெண்களை வதைக்கிறார்கள்?

"ராது, ராதிகா! தியேட்டர் வந்து சரியாக ஒரு நிமிஷம் முப்பது விநாடிகள் ஆகிவிட்டன. நீ என்ன தூங்குகிறாயா? வேண்டுமானால் வீட்டுக்கே போய்விடலாமா?" என்று கேட்டு அன்போடு என் கைகளைப் பற்றினார் அவர். எத்தனை சுகமான அணைப்பு! நான் கண்களைத் திறந்தேன். என் தியாகுவின் முகம் குழந்தைச் சிரிப்புடன் என் எதிரே தெரிந்தது. மனம் சட்டென்று இலேசானாற்போன்ற ஓர் உணர்வு. வாய் விட்டுச் சிரித்தேன். "என்ன குழந்தை போலத் திடீரென்று சிரிக்கிறாய்?" என்றார்.

"ஒன்றுமில்லை."

"ஒன்றுமில்லையா? எனக்குத் தெரியும். எனக்கு நீ குழந்தையாக, உனக்கு நான் குழந்தையாகத் தெரியும் வரை நமக்கெதற்கு வேறு குழந்தை? நம்மைப் பற்றிப் பேசுபவர்களுக்கு இது புரியுமா? ஊஹூம் — புரியாது. அதனால் அவர்கள் நன்றாகப் பேசட்டும். பேசிவிட்டுப் போகட்டும்" என்றார்.

"அப்படியே நான் உண்டாகி விடுகிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுதும் பேசும் ஜன்மங்கள் பேசத்தான் போகின்றன. பேசினால் பேசிவிட்டுப் போகட்டும்." என்று கூறித் தெளிந்த முகத்தோடு சிரித்தேன். அதைக் கண்டு அவர் சிரிக்க, அவரைக் கண்டு நான் சிரிக்க, வெறும் வாயை மெல்லுறவர்களுக்கு அவல் கிடைத்திருக்குமோ? பேசட்டுமே, பேசிவிட்டுப் போகட்டுமே!







# ஒரு கண்ணாடி; கொஞ்சம் மக்கு!

''பக்கத்து விட்டுச் சீனுதான் கண்ணாடியை உடைத்திருப்பான். அவன் அப்பாகிட்டே சொல்லி அவனைக் கண்டிக்கச் சொல்லுங்கள்'' என்றாள் கமலம் உடைந்த கண்ணாடி ஜன்னலைக் காட்டி.

''சீனுதான் உடைத்திருப்பான் என்று எப்படித் தீர்மானமாய்ச் சொல்ல முடியும்?'' என்று கேட்டான் அவள் கணவன் ராகவன்.

''இன்னிக் காலையில் அவனும் குண்டுவும் தான் தெருவில் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தார்கள். நான் உள்ளே வேலையாக இருந்தேன். கண்ணாடி உடைந்த சத்தம் கேட்டு விரைந்து வந்து பார்க்கும்போது அவர்கள் இருவரும் தலைக்கு ஒருபுறமாக ஓடிக்கொண்டிருந்தார்கள்'' என்றாள் கமலம்.

''அவனைக் கண்டிப்பது இருக்கட்டும். முதலில் ஒரு தச்சனை அழைத்துக் கொண்டு வந்து ஜன்னலுக்குக் கண்ணாடி போட்டாக வேண்டும்'' என்றான் ராகவன்.

''சீனுவின் அப்பாவிடம் போய்ச் சொல்லப் பயம் என்று சொல்லுங்கள்'' என்றாள் கமலம் குத்தலாக.

''பயம் ஒன்றும் இல்லை. 'அவன்தான் உடைத்தான் என்று நீ பார்த்தாயா?' என்று கேட்டால்?''

''சரி சரி. பத்தோ இருபதோ மொய் எழுதிக் கண்ணாடியைப் பொருத்துங்கள். மறுபடியும் அந்தப் பையன்கள் கிரிக்கட் ஆடி அதை உடைக்கட்டும்'' என்று விசித்துக் கொண்டாள் கமலம்.

''இன்னொரு தரம் உடைத்தால் சும்மா இருப்பேனா. அவன் விட்டு நிலைக்கண்ணாடி மேல் 'புட்பால்' ஆட மாட்டேனா?'' என்றான் ராகவன் ஹாஸ்யமாக.

''சூரப்புலிதான். நேரே போய்க் கேட்க வக்கில்லை. புட்பால் ஆடப்போகிறாராம்!'' என்றாள் கமலம்.

இவர்கள் வாக்குவாதம் முற்றும் தருணத்தில் அவர்கள் பக்கத்து விட்டுக்காரர் சம்பந்தம் அங்கு வந்து சேர்ந்தார்.

''என்னப்பா ராகவா! ஜன்னல் கண்ணாடி சுக்கு நூறாக உடைந்து கிடக்கிறது. மனைவி வீசி எறிந்த பாத்திரம் குறி தவறி ஜன்னல் மீது பட்டுவிட்டதோ?'' என்றார் கேலியாக.

''உங்கள் மனைவியைப் போல் நான் என்ன திறமைசாலியா? ஊரிலே கிரிக்கெட் வேகம் தலைவிரித்தாடுகிறது. தெருக் குழந்தைகள் எல்லாம் ஜன்னல் கண்ணாடியைக் குறி வைத்துப் 'பௌண்டரி' அடிக்கிறார்கள்'' என்றாள் கமலம்.

''குழந்தைகளாயிற்றே, அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள். என்ன செய்வது?'' என்றார் சம்பந்தம்.

''நான் சொன்னால் கேட்டாயா? சரி. முதல் வேலை, ஒரு தச்சனை அழைத்துக் கொண்டு வந்து கண்ணாடியை வைப்போம்'' என்றான் ராகவன்.

''என்ன ராகவா! எவ்வளவு பணம் ஆகும், தெரியுமா? அரசாங்கமே சிக்கனம் சிக்கனம் என்று சொல்லும்போது நாம் அனாவசியமாகப் பணத்தைச் செலவு செய்யலாமா?'' என்றார் சம்பந்தம்.

''கண்ணாடி போடாமல் இருந்தால் பணமே செலவாகாது. ரொம்பச் சிக்கனமாக முடியும்!'' என்றான் ராகவன்.

''நான் அப்படியா சொன்னேன்? இந்தச் சின்ன வேலைக்குத் தச்சன் எதற்கு? நீயே

செய்யலாமே. ஒரு கண்ணாடி; கொஞ்சம் மக்கு. அவ்வளவுதானே?'' என்றார் சம்பந்தம்.

''சரிதான் போங்கள். அவருக்குத்தான் எதுவுமே தெரியாதே. அவரிடம் போய்ச் சொல்கிறீர்களே?'' என்றாள் கமலம்.

''யாரைப் பார்த்து அப்படிச் சொல்கிறாய்? நானே இதைச் செய்து காட்டுகிறேனா இல்லையா, பார்'' என்றான் ராகவன்.

''போதுமே'' என்றாள் கமலம் கேலியாக.

''அவுங்க அப்படித்தான் சொல்லுவாங்க. நீ புறப்படப்பா'' என்று ஊக்குவித்தார் சம்பந்தம். ராகவன் சட்டையை மாட்டிக் கொள்ளும்போது அவர் விடைபெற்றுச் சென்று விட்டார்.

ராகவன் கண்ணாடிக் கடையை நோக்கிச் சென்றான். அவன் வீட்டுக்கும் கண்ணாடிக் கடைக்கும் சுமார் அரை மைல் தூரத்துக்கு மேலிருக்கும். பட்டை பளைக்கிற வெய்யிலில் குடை கூட இல்லாமல் புறப்பட்ட ராகவன் வேர்த்து விறுவிறுத்துக் கண்ணாடிக் கடையை அடைந்தான்.

''ஒரு கண்ணாடி வேண்டும்'' என்றான் ராகவன் கடைக்காரனிடம் தனது வியர்வையைத் துடைத்தபடி.

''என்ன சைஸ்?'' என்று கேட்டான் கடைக்காரன்.

''சைஸா? ஓ! அதாவது ஜன்னல் கண்ணாடி இருந்தால் கொடப்பா'' என்றான்.

''ஜன்னலுக்கும் சைஸ் உண்டு ஸார்!'' என்றான் கடைக்காரன்.



''அழகான தமிழ்ப் பதம் இருக்கும்போது இங்கிலீஷை ஏன் 'யூஸ்' பண்ணறே? அளவு வேண்டும்; அவ்வளவு தானே?'' என்று தன் ஜேபியில் கையை விட்டுத் தேட ஆரம்பித்தான் ராகவன்.

''அடடா! அளவை மறந்து வீட்டிலேயே வைத்து விட்டேன் போல் இருக்கிறதே. போய் எடுத்து வருகிறேன்'' என்று வீடு நோக்கிப் புறப்பட்டான் ராகவன்.

அவன் வீட்டில் நுழைந்ததும் ''கண்ணாடி எங்கே?'' என்று கேட்டாள் கமலம்.

''கடையில் பத்திரமாக இருக்கிறது. அளவு இல்லாமல் கண்ணாடி கொடுப்பானா? அதைச் சொல்ல வேண்டாமா முன்பாகவே?'' என்றான் ராகவன்.

''நானா கண்ணாடி வாங்கப் போனேன்? நீங்களல்லவா முன் யோசனையுடன் அளவு எடுத்துக் கொண்டு போயிருக்க வேண்டும்!'' என்றாள் கமலம்.

அவள் கூறியது காதில் விழாதது போல் ராகவன் அளவு எடுக்க ஆரம்பித்தான்.

''ஒரு காகிதத்தில் குறித்துக் கொள்ளுங்கள். பிறகு அதை ஏன் சொல்லவில்லை என்று ஆத்திரப்படப் போகிறீர்கள்!''

''எல்லாம் எனக்குத் தெரியும். நீ சும்மா இரு'' என்று எரிந்து விழுந்தான் ராகவன்.

அளவை எடுத்துக் கொண்டு போய்க் கடைக்காரனிடம் காட்டிக் கண்ணாடி கேட்டான் ராகவன்.

''சாதாரணக் கண்ணாடி ஒரு ரூபாயாகும். கனமானது ஒரு ரூபா ஐம்பது பைசா. கனமான கண்ணாடியே தரட்டுமா?'' என்றான் கடைக்காரன்.

''அரசாங்கமே சிக்கனம் சிக்கனம் என்று கூறும்போது வீணாகப் பணத்தைச் செலவழிக்கலாமா? சாதாரணமானதே போதும்.''

''ஆறு கண்ணாடி வாங்கினால் ஐந்து ரூபாய் தான் சார்.''

''ஒண்ணு போதுமப்பா.''

பணத்தைக் கொடுத்துக் கண்ணாடியைப் பெற்றுக் கொண்டு கிளம்பினான் ராகவன். இரண்டாம் முறை நடக்க வேண்டி வந்ததே என்ற எரிச்சலோடு புறப்பட்டான். ஆனால் அப்போது கடைக்குள் நுழைந்து கொண்டிருந்த ஓர் ஆசாமியின்மீது மோதிக் கண்ணா





தோட்டக்கார விசுவநாதன்

டியை நழுவ விடவே, அது மூன்றாக உடைந்து போய் விட்டது.

''என்னய்யா கண்ணு மண்ணு தெரியாமல் இப்படித்தான் மோதறதா?'' என்று எரிந்து விழுந்தான் ராகவன் அந்த ஆள் மீது.

''மோதினது நீயா நானா?'' என்று முறைத்தான் அந்த ஆசாமி.

''ஏன் சார் சண்டை போடுகிறீர்கள்? இன்னொரு கண்ணாடி தருகிறேன்'' என்று கடைக்காரன் இன்னொரு கண்ணாடியை வெட்டிக் கொடுத்தான் ஒரு ரூபாயைப் பெற்றுக் கொண்டு.

கால் கடுக்க வீட்டுக்கு வந்தான் ராகவன். கண்ணாடியை ஜன்னலில் பதிய வைக்கும் போதுதான் மக்கு வாங்கவில்லை என்பது நினைவுக்கு வந்தது. மறுபடியும் கடையை நோக்கிப் புறப்பட்டான்.

''மறுபடியும் எங்கே புறப்பட்டீர்கள்?'' என்று கேட்டாள் கமலம்.

''மக்கு வேண்டாமா? சுத்த மக்குப் பிளாஸ்திரி மாதிரி இருக்கிறாயே!'' என்றான் ராகவன்.

''ஒரே தரமாக எல்லாம் வாங்கிக்கொண்டு வரக் கூடாதா?''

''உட்கார்ந்தபடி அதிகாரம் பண்ணு!'' என்று ஆத்திரத்தோடு கூறிய ராகவன் மீண்டும் கடையை நோக்கி நடந்தான்.

அவன் தலையைப் பார்த்ததும் இன்னொரு கண்ணாடித் துண்டைக் காட்டி ''நீங்க வருவீங்கன்னு தெரியும். ரெடியா வெட்டி வைத்திருக்கிறேன்'' என்றான் கடைக்காரன்.

''நல்ல ஆளப்பா நீ. எனக்கு என்ன கையாலாகாது என்ற எண்ணமா? மக்கு இருந்தால் கொடு'' என்றான்.

''மக்கு இங்கே ஏது சார்? தேரடித் தெருவில் போய்க் கேளுங்கள்'' என்றான் கண்ணாடிக் கடைக்காரன்.

மக்கைத் தேடி வாங்க இன்னும் இரண்டு பர்லாங்குகள் நடக்க வேண்டி வந்தது. சிக்கனத்தைக் கடைப்பிடிக்கச் சொன்ன சம்பந்தத்தையும் மனைவியையும் நொந்து கொண்டான்.

கண்ணாடியைப் பதிய வைக்க வேண்டும் என்ற ஆத்திரத்தில் ஏற்கனவே ஜன்னலில் உடைந்து நீட்டிக் கொண்டிருந்த கண்ணாடித் துண்டுகளை அகற்ற வேண்டும் என்று முதலில் தோன்றவில்லை ராகவனுக்கு.

''ஐயையோ! இதென்ன வேலை? பழைய கண்ணாடித் துண்டுகளை எடுக்காமலேயே புதிய கண்ணாடியை வைக்கிறீர்களே!'' என்றாள் கமலம்.

''அது எனக்குத் தெரியாதா? நீ சொல்லித்தான் தெரிந்து கொள்ள வேண்டுமா? இந்தக் கண்ணாடி சைஸ் சரியாக இருக்கிறதா என்று பார்க்கிறேன்'' என்று சமாளித்தான். பிறகு தான் வாங்கி வந்த கண்ணாடித் துண்டைச் சுவரின் மேல் சாய்த்து வைத்து விட்டு, நாற்காலி மீது ஏறி, ஜன்னலில் ஒட்டிக் கொண்டிருந்த உடைந்த கண்ணாடித் துண்டுகளையும், ஜன்னலின் ஓரத்தில் காய்ந்து இறுகி இருந்த மக்கையும் எடுக்க ஆரம்பித்தான். இந்தப் பிரயத்தனத்தில் கைவிரலை இரண்டு முறை அறுத்துக் கொண்டான். ஒருவாறாக எல்லாவற்றையும் எடுத்துவிட்டுப் புதிய கண்ணாடியை எடுக்கலாம் என்று கீழே இறங்கும் தறுவாயில் நாற்காலி நகரவே கீழே விழாமல் சமாளிக்க முயன்று புதிய கண்ணாடி மீது காலை வைத்து விட்டான்.

''பார்த்து இறங்க வேண்டாமா? அநியாயமாகக் கண்ணாடியை உடைத்து விட்டீர்களே?'' என்றாள் கமலம்.

''காலில் அடிபட்டதா என்ற கவலை இல்லை. கண்ணாடி உடைந்து விட்டதே என்ற கவலை உனக்கு. ஏதடா வேலை செய்து கொண்டிருக்கிறானே, நாற்காலியை நகராமல் பிடித்துக்கொள்வோம் என்று இருக்கிறதா? ஏன் நிற்கிறாய்? இந்தக் கண்ணாடித் துண்டுகளையெல்லாம் எடுத்து வெளியே எறியேன்.''

பல்லை நறநறவென்று கடித்தபடி கண்ணாடிக் கடையை நோக்கி நடந்தான் ராகவன்.

''நீங்கள் வருவீர்கள் என்று எனக்குத் தெரியும். கண்ணாடியைத் தயாராக வைத்திருக்கிறேன்'' என்று கடைக்காரன் கூறுவதைக் கேட்க விரும்பாமல், ஒரு ரூபாய் பணத்தை எடுத்துக் கொடுத்துக் கண்ணாடியைத் தானே தூக்கிக் கொண்டான்.

ஜன்னலில் அதைப் பதிய வைக்கும்போது கண்ணாடியின் அளவு சற்றுப் பெரிதாக இருப்பது தெரிந்தது. என்ன செய்வது என்று ஒரு கணம் விழித்தான்.

''பெரிதாக வாங்கி வந்து விட்டீர்களா என்ன?'' என்றாள் கமலம்.

''யார் சொன்னது? மூலையில் கொஞ்சம் பிசிர்'' என்றபடி சொரசொரப்பான தரையில் கண்ணாடியின் ஓரத்தைத் தேய்க்க ஆரம்பித்தான்.

''பிசிர் என்றுவிட்டு ஓரத்தையெல்லாம் தேய்க்கிறீர்களே?'' என்றாள் கமலம்.

''நீ வாயை மூடிக் கொண்டிரு'' என்று சீறியபடி அவன் மீது வந்த கோபத்தைக் கண்ணாடி மீது காட்டி வேகமாகத் தேய்த்தான். அது 'மடக்'கென்று உடைந்தது.

''காசை இப்படித்தான் கரியாக்குவார்களா? உங்களுக்கோ கையாலாகாது. ஏன் இந்தச் சிரமம்?''

''யார் சொன்னது கையாலாகாது என்று? வேலை செய்யும்போது உன்னை யார் பேசக் கொடுக்கச் சொன்னது? எல்லாம் உன்னால் வந்த தீம்புதான்'' என்று கூறிக் கோபமாக மறுபடியும் கண்ணாடிக் கடையின்மீது படையெடுத்தான் ராகவன்.

இந்தத்தடவை வாங்கி வந்த கண்ணாடியை அதி ஜாக்கிரதையாக ஜன்னலில் பொருத்தி மக்கை அப்ப ஆரம்பித்தான். வாங்கி வந்த மக்கு வீணாகக் கூடாது என்று எல்லா மக்கையும் நிரவிப் பூசிவிட்டுக் கீழே இறங்கினான். பிறகு திருப்தி ததும்பும் முகத்தோடு, ''கையிலாகாது என்றாயே. இப்போதென்ன சொல்கிறாய்?'' என்றான் தன் மனைவியைப் பார்த்து.

கமலம் கண்ணாடியைத் தடவிப் பார்த்தாள். இலேசாக ஆடுவது போல் தெரிந்தது. ''கண்ணாடி கொஞ்சம் சைஸ் சின்னது போலிருக்கிறதே!'' என்றாள்.



பிரிட்டானியா
க்ளாக்ஸோ
தேநீர் அருந்தும் வேளையில் உங்கள் குடும்பத்தினருக்கு இனிய சுவையுள்ள க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை வழங்கி மகிழ்ச்சி அடையுங்கள்! பிரிட்டானியாவின் க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகள் சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் புஷ்டி தருகின்ற சிற்றுணவாகும். தேநீர், காபி, குளிர்ந்த பானம் ஆகியவை அருந்துகையில் க்ளாக்ஸோ பிஸ்கெட்டுகளை வழங்குங்கள்.
Glaxo
BISCUITS
THE BRITANNIA BISCUIT CO. LTD.
BOMBAY · CALCUTTA · DELHI · MADRAS
Britannia Glaxo Biscuits
BRITANNIA GLAXO BISCUITS
பிரிட்டானியா
பிஸ்கெட்டுகள்
© பிரிட்டானியா பிஸ்கெட் கம்பெனி லிமிடெட்
FBMI

''எல்லாம் கரெக்ட் சைஸ்தான். எனக்குத் தெரியாதா?'' என்றான் ராகவன்.

''இல்லீங்க. ஆடுது பாருங்க'' என்று இலேசாகக் கண்ணாடியை அழுத்தினான். அது வெளிப்புறம் விழுந்து சுக்கு நூறாகச் சிதறியது.

''வேண்டுமென்றே நீ அதைக் கீழே தள்ளி உடைத்து விட்டாய்'' என்று சண்டைக்கு வந்தான் ராகவன்.

''சரியான சைஸாக இருந்தால் எப்படி ஜன்னலுக்கு வெளிப்புறம் போய் விழும்? சின்ன சைஸ் கண்ணாடியை வாங்கி வந்து விட்டு வீணாக என் தலையில் பழியைப் போடுகிறீர்களே. பேசாமல் ஒரு தச்சனைக் கூப்பிடுங்கள்'' என்றாள் கமலம்.

அவன் கூறியதைச் சட்டை செய்யாமல் மறுபடியும் புறப்பட்டான் ராகவன் கடையை நோக்கி.

''ஒரேயடியாக ஆறு வாங்கியிருந்தால், ஒரு ரூபாய் மிச்சப்பட்டிருக்குமில்லையா? சொன்னால் கேட்டீர்களா?'' என்றான் கடைக்காரன்.

''ஆறு கண்ணாடிகள் நான் வாங்கப் போகிறேன் என்று உனக்கு ஜோசியம் தெரியுமா?'' என்றான் ராகவன் கோபமாக.

''அநுபவம்தானே சார். நேத்து ஒருவர் வந்து உங்களைப் போலவே செய்து கடைசியில் தச்சனை அழைத்துக் கொண்டு போனார்'' என்றான் கடைக்காரன்.

''யாரப்பா அது?'' என்றான் ராகவன் ஆச்சரியம் தாங்காமல்.

''உங்களைப் போல் அவரும் சிக்கனத்தைப் பற்றிச் சிறு பிரசங்கம் செய்துவிட்டு, நடைக்கொருதரம் ஒரு கண்ணாடி வீதம் ஒன்பது கண்ணாடிகள் வாங்கினார். நம்ம வாடிக்கைக்காரர்தான். நல்லமுத்து தெருவில் இருக்கிறார். சம்பந்தம் என்று பெயர்'' என்றான்.

விர்ரென்று கண்ணாடிக் கடையை விட்டுக் கிளம்பினான் ராகவன், சம்பந்தத்தைப் பார்த்துக் காரசாரமாகப் பேச வேண்டும் என்ற நோக்கத்தோடு.

சம்பந்தம் வீட்டை அடைந்தான். அவன் வீட்டில் இல்லை. சோமுவின் வீட்டுக்குச் சென்றிருப்பதாகச் சொன்னார்கள்.

சோமுவின் வீட்டுக்குப் போனான். வீட்டு வாசற்படியைத் தாண்டும்போதே சம்பந்தத்தின் குரல் கேட்டது.

''கண்ணாடி உடைந்தால் தச்சனைக் கூப்பிட வேண்டுமென்கிறாயே. அரசாங்கமே சிக்கனம் வேண்டுமென்று கூறும்போது நாம் பணத்தை விரயம் செய்யலாமா? இது ரொம்ப சிம்பிள் அப்பா. ஒரு கண்ணாடித் துண்டு. கொஞ்சம் மக்கு. அவ்வளவுதான்!'' என்றுசொல்லிக்கொண்டிருந்தான் சம்பந்தம்.

ராகவன் உள்ளே நுழையும் போது சோமு சம்பந்தத்தை ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தது தெரிந்தது.

''அதோ ராகவன். இவனும் கண்ணாடிக் கேஸ்தான். உன்னைப் போல்தான் தச்சன் தச்சன் என்றான். நான் அட்வைஸ் பண்ணினேன். என்னப்பா, ராகவா! சொல்லேன்'' என்றான் சம்பந்தம்.

''ஆமாம், சோமு! ரொம்ப சிம்பிள். ஒரு கண்ணாடித் துண்டு கொஞ்சம் மக்கு!'' என்றான் ராகவனும். ●

---



# கொசுக்கள் ஜாக்கிரதை!

**கதிர்**

அரசாங்கம், தனது ஐந்தாண்டுத் திட்டங்களின் அடிப்படையில் ஒரு நூதனமான பண்ணையைக் கூட வளர்த்து வருவதாகத் தெரிகிறது!

கால் நடைப் பண்ணை, மீன் பண்ணை, கோழிப் பண்ணை — இப்பேர்ப்பட்ட பண்ணை அல்ல இது! இதன் பெயர் கொசுப் பண்ணை! பல கோடி ரூபாய் செலவில் நாட்டில் இம்மாதிரி பெரிய கொசுப் பண்ணைகள் பல இடங்களில் தோன்றியிருக்கின்றன.

கொசுக்களுக்கு உணவு போடுவதற்காக இருபது லட்சம் மக்கள் தொகை கொண்ட பெரிய நகரம் ஒன்றே தென்னாட்டில் இருக்கிறது. இதன் பெயர்தான் சென்னை!

முன்பெல்லாம் பழையமாம்பலம், சைதாப்பேட்டை, கோடம்பாக்கம் இந்த வட்டாரங்களில்தான் கொசுக்கள் பண்ணை வளர்ந்தோங்கி வந்தது. இப்போதோ பல்லாவரம் முதல் திருவொற்றியூர் வரையில் எல்லா வட்டாரங்களிலும் மாபெரும் கொசுப் பண்ணை உருவாகியுள்ளது.

மலேரியா ஒழிப்புத் திட்டம் ஒருபுறமும், அதே சமயத்தில் தேங்கிக் கிடக்கும் கழிவு நீர்ப் பள்ளங்களில், கொசு வளர்ப்புத் திட்டமும் இணைந்து நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

கொசுக்கள் என்றால் அதுவும் இலேசான கொசுக்களா? ஒவ்வொன்றும் ஒரு மிருகமாகவே காட்சி தருகின்றது.

பக்கத்து வீட்டுக்காரர் இரவில் திருடர் பயத்தைப் போக்கிக் கொள்ள நாய் ஒன்று வளர்த்து வருகிறார் பாவம்! அந்த நாய் கொசுக்கடி தாளாமல் ஒவ்வொரு இரவும் படும் பாடு கொஞ்சமல்ல! யாராவது காம்பவுண்டுக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தால், அவர் காலடியில் கொசுக்கடிக்குப் பயந்து அது ஒண்டிக் கொள்கிறது.

இதைப் பற்றிப் பக்கத்து வீட்டு நண்பரிடம் நான் குறிப்பிட்டதும், அவர் தமது நாய்க்கும் ஒரு வலை வாங்கிக் கட்டிவிடப் போவதாகத் தெரிவித்தார்.

அதுமட்டுமல்ல, வெளிக் கேட்டில் ''நாய் ஜாக்கிரதை'' என்ற எச்சரிக்கைப் பலகையில் ஒரு மாற்றம் செய்து விட்டார். ''கொசுக்கள் ஜாக்கிரதை!'' என்று எழுதி விட்டார்.

திருடர்கள் உள்ளே நுழைந்தால் நிச்சயம் ரீங்கார கானத்துடன் கொசுக்கடிபட்டு ஓட வேண்டியதுதான்!



# வட்ட மேஜை

- 'எட்டா' பஸ்
- தர்மசங்கடம்
- சாதனைகளைப் பார்!

திருநெல்வேலியிலே அன்று தொட்டே ஓடிவருவது எட்டாம் நம்பர் பஸ். நெல்லை ஜங்ஷனில் புறப்பட்டு மீனாக்ஷிபுரம், சிக்கநரசையன் கிராமம், குறுக்குத்துறை வழியாக டவுன் சென்று மீண்டும் அதே வழியில் திரும்புகிறது. எட்டாம் நம்பர் பஸ்ஸில் எப்பொழுதுமே கூட்டம் அதிகமாக இருக்கும். இந்த வழியாகச் செல்லும் ஒரே பஸ் இது தான். அங்குள்ளவர்கள் ஜங்ஷனுக்கோ டவுனுக்கோ போகவேண்டுமென்றால் இந்த பஸ்ஸைத்தான் நம்பியிருக்கிறார்கள். சமீப காலமாக இந்த பஸ் ரூட்டில் மாறுதல் செய்திருக்கிறார்கள். எட்டாம் நம்பர் பஸ் ஜங்ஷனிலிருந்து தாலூகா ஆபீஸ் வழியாக டவுனுக்கும், அபிஷேகப்பட்டிக்கும், ஹைகிரவுண்டுக்கும் பல டிரிப்புகள் செல்லுகிறது. ஏற்கெனவே இந்த ரூட்களில் அதிக பஸ்கள் ஓடுகின்றன. சுமார் 4 நிமிடங்களுக்கு ஒரு பஸ் வீதம் ஓடும் இந்த ரூட்களில் எட்டாம் நம்பர் பஸ்ஸும் ஓட வேண்டிய அவசியமில்லை. மாறாக எட்டாம் நம்பர் பஸ் மற்ற ரூட்களில் ஓடுவதால் மீனாட்சிபுரம், சிக்கநரசையன் கிராமம், குறுக்குத்துறை செல்ல வேண்டியவர்கள் இந்த பஸ்ஸிற்காக ஒரு மணி ஒன்றரை மணி நேரம் காத்திருக்கவேண்டியதாகிறது. சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இந்த விஷயத்தைக் கவனித்து ''எட்டா'' நம்பர் பஸ்ஸை எங்களுக்கு ''எட்டும்'' நம்பர் பஸ்ஸாக ஆக்குவார்களா?

திருநெல்வேலி
29—4—68 ஆர். அனந்தராமகிருஷ்ணன்

அளவுக்கு மீறி ஆபாசமாய் த்வனிக்கும் படியான இனக் கவர்ச்சி வர்ணனைகளடங்கிய ''காதலர் இருகுரல்'' இசைத்தட்டுகள்தான் இப்பொழுது ரேடியோவில் அதிகமாய் ஒலி பரப்பப்படுகின்றன. சுலபமாய்ப் பாட வந்து விடுகிற மேற்படி பாட்டுக்களைப் பாலர்கள் தங்களுடைய பெற்றோர் முன் பாட ஆரம்பிக்கும்போது பெற்றோருக்குத் தர்மசங்கடமான நிலைமை ஏற்படுகிறது. இந்தப் பாட்டுக்களில் முறையான இசை இல்லாததோடு கர்ணகடூரமாய்ப் பண்பற்ற வகையில் எக்காளமும் ஓலமும், கனைப்பும்தான் நிறைந்திருக்கிறது.

இத்தகைய திரைகானத்தைப் பெருவாரியாய் மக்களிடம் பரப்புவதற்கு துரதிருஷ்டவசமாய் ரேடியோதான் முக்கிய சாதனமாய் இருக்கிறது. இதன் தீமைகளைத் தடுக்க ரேடியோ நிலையத்தார் உடனடியாய் ஒரு தணிக்கைக் குழு அமைத்து, திரைப்படப் பாடல்கள் ஒவ்வொன்றின் சாகித்தியத்தையும் ஆராய்ந்து ஆக்ஷேபிக்கக்கூடிய பாடல்களையெல்லாம் ஒதுக்கிவிட்டு நல்ல பாட்டுக்களை மாத்திரம் ஒலிபரப்ப வேண்டும்.

மதராஸ்-33
29-4-68 கு. ராமமூர்த்தி

மே தினம் என்றதும் தொழிற் சங்கங்கள் நினைவு எழும். தொழிற் சங்கம் என்றால், தொடர்ந்து வேலைநிறுத்தம், போராட்டங்கள், கோரிக்கைகள், உண்ணாவிரதம், 'கேரோ' முதலிய பிரச்னைகளும் நினைவுக்கு வரத்தான் செய்யும். அலுவலர்களின் நன்மைக்கு உகந்த முறையில் நற்பணிகள் பல புரிந்து வரும் சில சங்கங்களும் இல்லாமல் இல்லை. இதோ ஒரு சங்கத்தின் சாதனைகளைப் பார்க்கலாம்:

ஊழியர் ஒருவர் காசநோய், அல்லது புற்று நோய் கண்டு சிகிச்சை பெற்றால், அவருக்கு அலுவலர் சங்கம் ரூ. 100 உதவித் தொகை வழங்குகிறது. ஹார்லிக்ஸ், பழங்கள் முதலிய சத்துப் பொருள்கள் உண்டு, உடலுக்கு ஊட்டம் அளிக்க வேண்டும் என்று டாக்டர்கள் சிபாரிசு செய்வார்கள். இந்த வசதியை ஊழியருக்கு அளிக்கச் சங்கம் உதவி செய்கிறது. இது கடன் அன்று. ஊழியர் இந்தத் தொகையைச் சங்கத்துக்குத் திருப்பித் தர வேண்டியதில்லை. உடல் நலம் குன்றி, ஓர் ஊழியர் சம்பளமில்லாமல் லீவு எடுக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டால், ஒரு நாளுக்கு ரூ. 2 வீதம் உயர்ந்த பட்சம் 100 நாட்களுக்கு ரூ. 200 வரை சங்கம் ஊழியருக்கு வழங்குகிறது. சர்வீஸில் இருக்கும்போது ஓர் அலுவலர் உயிர் இழக்க நேர்ந்தால், செய்தி கிடைத்த ஒரு மணி நேரத்துக்குள் சங்கச் செயலாளர் இறந்தவரின் வீடு தேடிச் சென்று அவரது மனைவி அல்லது நெருங்கிய உறவினரிடம் ரூ. 250 ரொக்கமாகக் கொடுத்து உதவுகிறார். இது பற்றிச் செயலாளர் திரு எல். ஆர். நாராயணன் கூறுகிறார்:

''வறுமையினால் அவதிப்படாத குடும்பத்தில்கூடத் திடீரென்று ஓர் ஊழியர் இறந்துவிட்டால் குடும்பத்தினரிடம் கைவசம் ரொக்கம் இருக்கும் என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. எங்கள் சங்கம் வழங்கும் இத் தொகை ஈமச் சடங்குகளுக்குப் பெரிதும் உதவும். இந்த ஊழியரின் குடும்பத்தினர் யாரிடமும் கடன் கேட்க வேண்டிய அவசியம் இல்லை. உறுப்பினர் செலுத்தும் மாதச் சந்தாவான எட்டணாவிலிருந்துதான் இந்த நற்பணிகளையெல்லாம் செய்கிறோம்.''

எழும்பூர் அஞ்சல் தணிக்கை அலுவலக ஊழியர் சங்கந்தான் இந்த அரிய சேவையைச் செய்து வருகிறது!

சென்னை-8
20-4-68 'மானினி'

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி